# ஸ்ரீ ராமாநுஜன் 122

சென்னை ஸத்க்ரந்தப்ரகாசந ஸபையின் மூலமாக
மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை

ஆசிரியர் : ஸ்ரீகாஞ்சீ. ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர்.

| ஸம்புடம் 11 | 1959௵ பிப்ரவரி௴ விளம்பி௵ மாசி௴ | மலர் 2 |
|---|---|---|

## திருவாய்மொழி நூற்றந்தாதி—14.

ஆடிமகிழ் வானில் அடியார்குழாங்களுடன்
கூடியின்பமெய்தாக் குறையதனால்—வாடிமிக
அன்புற்றார் தம்நிலைமை ஆய்ந்துரைக்க மோகித்துத்
துன்புற்றான் மாறனந்தோ.

| | |
|---|---|
| மாறன் | ஆழ்வார் |
| ஆடி மகிழ் வானில் | (நிரந்தர பகவதனுபவத்தாலே) கூத்தாடிக் களிக்குமிடமான பரமபதத்தில் |
| அடியார் குழாங்களுடன் | (நித்யமுக்தர்களாகிற) அடியார்களின் திரளோடே |
| கூடி | கலந்து |
| இன்பம் எய்தா குறை அதனால் | ஆனந்திக்கப்பெறாத குறையினாலே |
| மிக வாடி | மிகவும் வாட்டமடைந்து, |
| தம் நிலைமை | (அப்படிப்பட்ட) தமது நிலைமையை |
| அன்பு உற்றார் | அன்பர்களான ஸ்ரீமதுரகவி போல்வார் |
| ஆய்ந்து உரைக்க | ஆராய்ந்து சொல்லும்படியாக [அதாவது, தம்வாயாற்சொல்லுகிற பாசுரமன்றியே வேற்றுவாயாற்சொல்லுகிற பாசுரமாம்படியாக] |
| மோகித்து | மோஹமடைந்து |
| துன்புற்றான் | துக்கித்தான்; |
| அந்தோ | ஐயோ! |

கீழ் *ஊனில்வாழுயிரேயில் "அடியார்கள் குழாங்களை உடன் கூடுவதென்றுகொலோ" என்று பாரித்த ஆழ்வார் அவ்வண்ணமாகவே பரமபதத்தில் நித்யமுக்தர் திரளிலே சென்று சேர்ந்து அனுபவிக்கப்பெறாத குறையினாலே மோஹமடைந்தார்; அந்தமோஹம் எப்படிப் பட்டதென்னில்; தம் வாயாலே பாசுரம் பேசவொண்ணாமே தாய்ப் பாசுரமாக வேற்று வாயாலே பேசலாம்படியாயிற்று. அப்படிப்பட்ட வ்யஸநம் இத்திருவாய்மொழியிலே நிகழ்ந்தது—என்றதாயிற்று.

* ஊனில்வாழுயிரேயென்கிற கீழ்த்திருவாய்மொழியில் "பரமன் பவித்திரன் சீர் — அடியேன் வாய்மடுத்துப் பருகிக் களித்தேனே" என்று ஆழ்வார்தாம் பரமானந்தமடைந்ததாக அருளிச்செய்து, அந்த குணானுபவம் பாகவதர்களோடேகூடிப் பெரிய கோஷ்டியாக இருந்து செய்யவேண்டியதாகையாலே அப்படிப்பட்ட அதிகாரிகள் இந்நிலத்தில் விசேஷமாகக் கிடையாமையாலே திருநாட்டிலே நித்யஸூரிகளின் திரளிலே சென்று புகுந்து அநுபவிக்கவேணுமென்று பாரித்து, அந்தப் பாரிப்பைக் களிப்புங் கவர்வுமற்று என்ற பாசுரத்திலே

காட்டினார். நினைத்தபோதே அந்த நித்யஸூரிகளின் திரளிலேபோய்ச்சேர்ந்து அநுபவிக்கப் பெறாமையினாலே மிகவும் வருத்தமடைந்தார். அந்த வருத்தத்தைத் தம்முடையவர்களான ஸ்ரீ வைஷ்ணவர்கள் எம்பெருமானுக்கு அறிவிக்கிறவகையாக இத்திருவாய்மொழியை அருளிச் செய்தாரென்கை.

ஆழ்வார் இப்போது தாமான தன்மையையிழந்து நாயகீஸமாதியிலே நிற்கிறார். பராங்குச நயகியான இவளுடைய நிலைமையைத் தாய்மார் முதலான அன்பர்கள் பேசுகிற பேச்சாக இத்திருவாய்மொழி அமைந்திருக்கின்றதென்றவாறு.

நாயகிஸமாதியாலே அருளிச்செய்த திருவாய்மொழிகள் கீழே இரண்டு சென்றன — * அஞ்சிறையமடநாராய் என்பதும் * வாயுந்திரையுகளும் என்பதும். அவையிரண்டும் நாயகி தானே பேசினபேச்சாக இருக்கின்றன. * அஞ்சிறையமடநாராயில் தானே தூதுவிட்டாள்; * வாயுந்திரையுகளில் – கண்ணுற்கண்ட பொருள்களெல்லாம் எம்பெருமானைப் பெறாமையினாலே நோவுபடுகின்றனவாகக்கொண்டு அவற்றுக்குமாகத் தான்நோவுபட்டாள்; இத்திருவாய்மொழியிலோ வென்னில் அங்ஙனம் தன் வாயினால் பேசமாட்டாதபடி வேற்று வாயாலே பேசக்காண்கையாலே ஆற்றாமை கரைபுரண்டமை விளங்குகின்றது.

'ஸ்ரீராமக்ருஷ்ணாதி அவதாரங்களைப் பண்ணி எல்லாருடைய ஆர்த்தியையும் போக்குவதையே இயல்வாகவுடையீராயிருந்த நீர் உம்மிடத்திலே பெரும் பித்துக்கொண்டிருக்கிற இப்பெண்பிள்ளை இப்படி நோவுபடுமாறு பார்த்திருத்தல் தகுதியோ? இவள் திறத்திலே நீர் செய்ய நினைத்திருப்பது என்ன? என்று எம்பெருமானை நோக்கித் தாய் கேட்கிற பாசுரமாக இத்திருவாய்மொழியுள்ளது. தாய்ப்பேச்சாக இருந்தாலும் பேசுகிறவர் ஆழ்வாரேயன்றோ, அவர் என் இப்படிப் பேசவேண்டும்? என்று கேட்கலாகாது. வேணுமென்று ஆழ்வார் இங்ஙனே பேசுகின்றாரல்லர். அவருடைய அளவுகடந்த ஆற்றாமை உள்ளிருந்து வெளியே பொசியும்போது இவ்வகையான பாசுரங்களாக வடிவுகொண்டதத்தனை. காவிரியாறு பெரு வெள்ளமாகப்பெருகி வரும்போது வெள்ளத்தின் மிகுதியினால் இடையிடையே உடைந்து வேறு சில வாய்க்கால் வழியாகவும் பெருகுவதுண்டு; அவையும் திருக்காவேரித் தீர்த்தமாகவேயிருக்கச்செய்தேயும் முடிகொண்டான், குடமுருட்டி முதலான வேறு சில பெயர்களைப் பெற்று வழங்கா நிற்கக்காண்கிறோம். அதுபோலவே எல்லாம் ஆழ்வார் பாசுரமாகவேயிருக்கச் செய்தே தாய்பாசுரம், தோழிபாசுரம் என்னும் வேற்றுமைகள் விளைகின்றன.

நாயகீஸமாதியாலே பேசின [மேற்காட்டிய] இரண்டு திருவாய்மொழிகளைப்போல அல்லாமல் இத்திருவாய்மொழி வேற்றுவாயாலே பேசுவதாக விலக்ஷணமாய் அமைந்தபடியாலே ஆற்றாமையிலும் வாசிகாணத்தக்கதாகும். * அஞ்சிறைய மடநாராய் பேசும்போது இருந்த ஆர்த்தி எப்படிப்பட்டது? *வாயுந்திரையுகளும் பேசும்போது இருந்த ஆர்த்தி எப்படிப்பட்டது? இப்போது இத்திருவாய்மொழி பேசுகையிலுள்ள ஆர்த்தி எப்படிப்பட்டது? என்று ஆராய்வோம். ஒருவன் ஒருநாள் ஒரு வெள்ளிக்கட்டியை இழந்துவிடுகிறான்; அப்போது ஒரு ஆர்த்தியுண்டு; அவனே மற்றொருநாள் ஒரு பொன்கட்டியை இழந்து விடுகிறான்; அப்போது உண்டாகிற ஆர்த்தி முன்னிலும் விஞ்சியதாகும். அவன்றானே மற்றொருநாள் ஒரு சிறந்த ரத்னஹாரத்தை இழந்துவிடுவானாயின் அப்போது உண்டாகிற ஆர்த்தி அறவிஞ்சியதாயிருக்கும்: இழக்கப்படுகிறபொருளுக்குத்தக்கவாறு ஆர்த்தியின் தன்மை இருக்குமென்று இத

னுல்தேறுகின்றது. இவ்வகையாலே ஆழ்வார் திறத்துப்பார்க்கும்போது* அஞ்சிறைய மடநாராயில் ஒடின ஆர்த்தியிற்காட்டிலும் வாயுந்திரையுகளில் ஆர்த்தி கனத்ததென்றும் அதிற்காட்டிலும் இப்போதைய ஆர்த்தி மிகக் கனத்ததென்றும் நிலையிடலாகும். இதற்குறுப்பாக, ஒவ்வொன்றிலும் (முன்னே) ஆழ்வார் ஆசைப்பட்ட பொருள் என்ன? என்று பார்த்து அவற்றின் வாசிகளை அறுதியிடவேணும். * அஞ்சிறையமடநாரைக்கு முன்னே "பெருநிலங் கடந்த நல்லடிப்போது அயர்ப்பிலனலற்றுவன் தழுவுவன் வணங்குவனமர்ந்தே" என்று உலகளந்த சேவடியைத் தழுவியநுபவிக்க ஆசைப்பட்டமை காண்கையாலே அங்கு அது பெருமையாலுண்டான வருத்தம் என்று தெரிகின்றது. * வாயுந்திரையுகளுக்கு முன்னே "நம்பியைத் தென்குறுங்குடிநின்ற" என்று அர்ச்சாவதாரத்திலே அநுபவிக்க ஆசைப்பட்டமை காண்கையாலே அங்கு அது பெருமையாலுண்டான வருத்தம் என்று தெரிகின்றது. விபவாவதாரத்திற்காட்டிலும் அர்ச்சாவதாரம் சீரியதாகையாலே அவ்விடத்து அநுபவம் பெருமையினுலுண்டான வருத்தமும் மேற்பட்டதாகவேயிருக்கும்.

இனி, இத்திருவாய்மொழிக்கு முன் ஆழ்வார் ஆசைப்பட்டது என்ன? என்று பார்ப்போம். "அடியார்கள் குழாங்களை உடன் கூடுவது என்று கொலோ" என்கிற பாசுரமிருக்கையாலே பாகவதகோஷ்டியோடே கூடிக்களிக்கும்பேற்றை ஆசைப்பட்டாரென்று விளங்குகிறது. கீழே இவர் ஆசைப்பட்டனவாகக் காட்டப்பட்ட இரண்டு அபேக்ஷைகளுக்கு மிகவும் மேற்பட்டதன்றோ இது. விபவாவதார அநுபவ அபேக்ஷையிற்காட்டிலும் சிறந்தது அர்ச்சாவதாராநுபவ அபேக்ஷை; அதிற்காட்டிலும் மிகச்சிறந்தது பாகவதகோஷ்டியிலே கூடியநுபவிக்க அபேக்ஷிப்பது. ஆகவே இங்ஙனம் மிகச்சிறந்ததான அபேக்ஷை கைகூடப் பெருமையினுலுண்டான ஆற்றாமையும் இதற்குத்தக்கவாறு கனத்திருக்குமன்றோ; அப்படிப்பட்ட ஆற்றாமை பேசுவிக்கிற திருவாய்மொழியாயிற்று இது.

பாகவதர்களோடே கூடிக்குலாவி அநுபவித்தல் அபேக்ஷிதமாகி அது கிடைக்கப் பெருமையினுலுண்டான வருத்தத்தினுல் பேசுகிற திருவாய்மொழி இதுவென்னில், அவர்களைச்சொல்லிக்கூப்பிடவேண்டியதன்றோ ப்ராப்தம்; அப்படியில்லையே; இதுவென்? என்னில்; எங்கேனுமொரு காட்டிலே ரத்னங்கள் பறியுண்டாலும் நாட்டிலே அரசன் வாசலிலே அவன் பேரைச்சொல்லி முறையிடுவதன்றோவுள்ளது. பாகவத ஸஹவாஸத்திற்கும் வடிகன் அவனுகையாலே அவனைச்சொல்லிக் கூப்பிடுதல்கூடும. .... ... ... (*)

---

## பெரியாரின் பரமபத ப்ராப்தி.

(ஆ. அ.)

[illegible]
[illegible]
[illegible]
[illegible] ॥

[illegible] ।
[illegible] ॥

ஸ்ரீமதுபயவே. திருமலை அனந்தாண்பிள்ளை புரிசை. கிருஷ்ணமாசாரியர் ஸ்வாமியைத் தென்னாட்டிலும் வடநாட்டிலும் ஸகல வித்வான்களும் நன்கறிவர். இந்த ஸ்வாமி 2-2-59 தைமாத கிருஷ்ணபக்ஷ தசமியன்றிரவு மாம்பலத்தில் [தமது எழுபத்தாறுவது திருநக்ஷத்திரத்தில்] திருநாடலங்கரித்தாரென்னும் விஷயம் வெகு நிர்வேதத்துடன் தெரிவிக்கலாகிறது.

இந்த ஸ்வாமி திருவவதரித்தது காஞ்சீபுரியில். முப்பது திருநக்ஷத்திரம் வரையில் வளர்ந்ததும் காஞ்சீபுரியிலேயே. அக்காலத்தில் தேவப்பெருமாள் ஸன்னிதிவீதி வானமாமலை மடத்தில் மிகப்பெரிய ஸம்ஸ்க்ருத பாடசாலை நடந்துவந்தது. அதில் ஸாஹித்யோபாத்யாயராக எழுந்தருளியிருந்த அடியேனது திருத்தகப்பனாரான ஸ்ரீ. அண்ணாரங்காசார்ய ஸ்வாமியிடத்தில் காவ்யநாடகாலங்காரங்கள் வாசித்தார். கீர்த்திமூர்த்தியான [ஸ்ரீமத் குன்றபாக்கம். சீமாச்சார்ஸ்வாமியென்று ஜகத் விக்க்யாதராயெழுந்தருளியிருந்த] ஸ்ரீமதுபயவே. திருமலை. அனந்தாண்பிள்ளை ஸ்ரீநிவாஸாசார்யஸ்வாமி ஸன்னிதியில் நியாயவேதாந்தங்களைப் பரிபூர்த்தியாக அதிகரித்தார். திருப்பதி ஸம்ஸ்க்ருத மஹாவித்யாலயத்தில் பலஸம்வத்ஸரங்கள் நியாய சாஸ்த்ரப்ரவசநநிஷ்ணாதராக எழுந்தருளியிருந்தார். விச்ராந்திபெற்று பத்து ஸம்வத்ஸரங்களுக்கு மேலாகிறது. விச்ராந்தரானதுமுதல் பெரும்பாலும் மாம்பலத்திலேயே வாஸமாக எழுந்தருளியிருந்தார். பலகால் ஸ்ரீ பாஷ்யப்ரவசநம் செய்துபோந்தார். இரண்டு மூன்று ஸம்வத்ஸரங்களாகவே திருமேனியில் தளர்ச்சி மிகவுமுண்டாயிருந்து வெளியில் நடையாடாமலேயிருந்தார். இம்மண்ணுலகின் பாக்கியம் இவ்வளவேயென்று நினைக்கவேண்டியதாயிற்று. ப்ராசீநவித்வான்களில், தத்ராபி குன்றபாக்கம் ஸ்வாமியின் விசேஷகடாக்ஷ பாத்ரபூதர்களான வித்வான்களில் இந்த ஸ்வாமியே சரமஸ்தானம் வஹித்திருந்தார்.

இவர்க்குத் திருக்குமாரர்கள் மூவர். மூவரும் லௌகிகபதவிகளில் ப்ரதிஷ்டிதர்களாய் விளங்கி வருகின்றனர். வித்வத் குடும்பங்களில் வித்வத்பரம்பரை யென்கிறபெருமை லோபித்தேவிட்டதன்றோ. திரோஹிதர்களாகும் வித்வான்களின் ஸ்தானம் பூர்த்திபெறுமலேயிருந்துவரும்படி எம்பெருமான் ஸங்கல்பித்துவிட்டான்போலும்.

---

# ஓர் அபிலாஷை.

அடியேன் நாடோறும் அல்லது அநவரதம் ஸ்மரிக்கின்ற (கீர்த்திமூர்த்தியான) ஜகத்குரு. பிரதிவாதிபயங்கரம் ஸ்ரீமத் காதி ஸ்வாமி திருவடிகளில் பழகிவந்த காலத்தில், பல திசைகளிலிருந்து ஸ்ரீஸ்வாமி ஸன்னிதிக்கு தினப்படியாகவரும் தபால்கடிதங்களை ஸ்ரீஸ்வாமி கடாக்ஷித்தானபிறகு சிலவற்றை அடியேனும் பார்க்கும்படி நியமிக்க நேரும். பண்டிதர்களின் கடிதங்களாயிருந்தால் அவை பெரும்பாலும் சுவைமிக்கிருக்கும். அந்தச்சுவை காட்டிலெரித்த நிலாவாகாதபடி ரஸிகர்கள் பலரும் அநுபவிக்கச்செய்யவேணுமென்று ஆசை தோன்றி ஸ்ரீஸ்வாமி ஸன்னிதியில் அடியேன் பிரார்த்தித்தபோது அதை ஸ்வாமியும் ஆமோதித்து ஈஹவ நமான கடிதங்களை மஞ்ஜுபாஷிணீபத்திரிகையில் வெளியிட்டுவர நியமனமாகி, அப்படியே பலபத்திரிகைகள் வெளியிடப்பட்டுவந்தன. "ஸஹூஉயா நாம்ஸௌஹா உ-உவதி காஃ" என்ற மகுடத்தின்கீழ் அவை வெகுகாலம் வெளிவந்தன. அடியேன் தெரிவிக்கிறவிது 30, 35 வருஷங்களுக்கு முற்பட்ட செய்தி. அப்போது அந்த நிகழ்ச்சி ரஸிகர்களுக்கெல்லாம் மிகவும் ஆகர்ஷகமாக இருந்துவந்தது. "தெஹி நொ ஷிவஸா மதாஃ"

என்று வருந்தவேண்டிய காலமிது. அக்காலத்திலிருந்த ஸம்ஸ்க்ருத பண்டிதர்கள் இக்காலத்தில் இல்லையோவென்று சில ஸமயங்களில் நினைக்கிறேன். 'ஏனில்லை, அதிகமாகவுமிருக்கிறார்கள்' என்றும் சில ஸமயங்களில் நினைக்க ப்ராப்தமாகிறது. பல பண்டிதர்களின் கடிதங்களை அடியேன் பெற்றுப் பார்க்கிறபோது 'இவற்றை நமது பத்திரிகைகளில் வெளியிட்டு ஸஹ்ருதய ஹ்ருதயரஞ்ஜநம் செய்யலாமோ' என்று தோன்றியதனால் இதுதெரிவிக்கலாகிறது. இவ்வபிலாஷம் அடியேனுக்குப் புதிதன்று. ஏற்கெனவே இது தோன்றி ஸ்ரீராமாநுஜனிலும் வைதிகமநோஹராவிலும் சில மஹான்களின் கடிதங்களை வெளியிட்டதுமுண்டு. இந்த பத்ததி இடையில் விடப்பட்டிருந்தது. இனி இதைப் பத்ரிகைதோறும் அநுவர்த்திக்கச் செய்து போகவேணுமென்கிற ஆசையை இப்போது விஜ்ஞாபித்துக்கொண்டபடி. தமிழ்க் கடிதங்களை ஸ்ரீராமாநுஜனில் வெளியிடுவது; ஸம்ஸ்க்ருத கடிதங்களை வைதிகமநோஹராவில் வெளியிடுவது—என்று உத்தேசம். ஆனால், வருகிற கடிதங்களெல்லாம் வெளியிடப்படமாட்டா; ஆவச்யகதை தோன்றும் கடிதங்கள் மட்டுமே ஸமயவிசேஷங்களில் வெளியிடப்படும்.

7—2—59 தேதியாகிற இன்று கிடைத்த சில கடிதங்களைக் கண்டபோது இவ்வபிலாஷமுதித்தபடியால் இன்றைய கடிதங்களையே முன்னம் வெளியிடுகிறேன்.

## ப்ரஹ்மஸ்ரீ. போலஹம் சாஸ்த்ரிகளின் கடிதம்.

1. மயிலை ஸம்ஸ்க்ருத காலேஜில் சாஸ்த்ரோபாத்யாயராக விளங்கும் ப்ரஹ்மஸ்ரீ. போலஹம், ஸ்ரீராமஶாஸ்த்ரிகளவர்களின் கடிதம். 6—2—59 தேதி கொண்டது. "......... ஸ்ரீராமாநுஜன் பத்திரிகை 121. கிடைத்தது. அதைப்பார்த்தேன். ஸ்ரீரங்கநாதபாதுகா ஸமீக்ஷாவைப் பார்த்து ரஸித்தேன். அது மிகவும் ஆஸ்வாத்யமாக இருக்கிறது. தேவரீர் தெற்கே ஸஞ்சாரம் போகும் ஸமயம் அனுப்பிய கவர் அப்போதே கிடைத்தது 'உயுஃஶாயாமந்தஃ கூரஷஃ கயமஹோகஃ௰ஜெஷ்தி' என்று .... .... ஸ்ரீ அஶணுளிடம் விஜ்ஞாபித்தேன். மந்தஹாஸத்துடன் ஏற்றுக்கொண்டார்கள். தங்களைப்போன்ற ஆஸ்திகோத்தமர்கள் ஸநாதந தர்மப்ரசாரத்தில் ஈடுபட்டால் ரொம்பவும் ஜகத்க்ஷேமம் ஏற்படும். தத்காலத்தில் மிகவும் முக்க்யம். அவாந்தரமத பேதங்கள் ப்ரத்யேகம் இருக்கட்டும். பொதுவான கார்யங்கள் செய்யவேண்டும். (ச்லோகம்.) ஶாவிநி ஸ்ரீவைஷ்ணவாவெ உக்ஷிணொதரயொஹீஶாஃ। கூ ஊகஶாவாஆபஊஹஙக ஜாயவீ தத்ரு உக்ஷிணா॥ என்று எனது அந்தரங்காபிமானம். தென்கிளை வடகிளை என்பது தென்கலை வடகலை என்று விபரிணமத்தை யடைந்துவிட்டதென்று என் அபிப்ராயம். அதன் ஔசித்யம் தாங்கள்தான் சொல்லவேணும். உக்ஷிண ஶாவாவின் ஞுஜஙவம், உதரவஸ்ரா வைவரீதஂஆ ஸஹஜஃ. வைதிகமநோஹரா இப்போதே கிடைத்திருக்கிறது. நமஸ்காரம். P. S. ஸ்ரீராமசாஸ்த்ரிகள்."

[* இங்கே ஒரு சிறு விஜ்ஞாபனம். இத்தகைய கடிதங்களை நாம் வெளியிடுவதில் அநௌசித்யமும் நினைக்கக்கூடியதுண்டு. ஒரு தலையில் ஆர்ஜவம்—மற்றொரு தலையில் வைபரீத்யம் என்பதாக சாஸ்த்ரிகளவர்கள் எழுதியிருப்பதைக்கண்டு சிலர் அவரோடு மநஸ்தாபப்பட முன்வரவுங் கூடும். அதற்கு நாம் அவகாஶம் அளிக்கத்தகாது. ஶாஊய ஸவஹி, ஶாவணாய ஸவஹி என்பாருமுண்டென்று கொண்டு அவர்கள் ஸமாஹிதர்களாக வேணுமேயொழிய மநஸ்தாபப்பட நினைக்கத்தகாது. சாஸ்த்ரிகள் தென்கிளை, வடகிளை என்று ஊஹிப்பதில்

அவத்யமொன்றுமில்லை. திருமங்கையாழ்வாரருளிய சிறியதிருமடலில் * சீராரிருகலையுமெய்துவர் * என்ற விடத்து 'கலை' என்னுஞ் சொல்லின் பொருளைத் திருஷ்டாந்தமாகக் காட்டி நாம் ஏற்கெனவே யெழுதியிருப்பதுமுண்டு. கலையென்னுஞ்சொல்லுக்கு எந்த அர்த்தம் கொண்டாலும் அநுபபத்தியொன்றுமில்லையென்க.]

## ராவ்ஸாஹிப் S. ராகவையங்கார் ஸ்வாமியின் கடிதம்.

2. [இரண்டாவது கடிதம்; சென்னை. டி. நகர். 26, பாஜுல்லா ஸாஹிப் ரோட். ஸ்ரீமதுபயவே S. ராகவையங்கார் ஸ்வாமி யெழுதியது] இந்தஸ்வாமியைப்பற்றி அடியேன் பலகால் விஜ்ஞாபனம் செய்திருப்பதை நண்பர்கள் மறந்திரார்கள். 75 திருநக்ஷத்திரங் கொண்ட இந்த மஹான் உயர்ந்த லௌகிகபதவியில் வாழ்ந்து விச்ராந்திபெற்றிருக்கச் செய்தேயும் இரவும் பகலும் க்ரந்த பரிசீலனங்களே போதுபோக்காயிருப்பவர். அடியேனுடைய பிரசுரங்களை யெல்லாம் ஒருவரிவிடாமல் ஆழ்ந்து ஆராய்ந்து உடனுக்குடனே குறை நிறைகளைத் தெரிவிப்பவர்களில் இந்த ஸ்வாமி தலைவர். இவர் 7—2—59ல் அருளிய ஸ்ரீமுகம்;—

"ஸ்ரீராமாநுஜன் 121 ஸேவிக்கப்பெற்றேன். ஸாரார்த்த ஸங்க்ரஹமென்னும் வியாஸம் பரமபோக்யமாயுள்ளது. இதில் 8-வது பக்கத்தின் முடிவும் 9-வது பக்கத்தின் ஆரம்பமும் ஸரியாக இல்லை. 9-வது பக்கத்தின் தொடக்கத்தில் சில வரிகள் அச்சில் விடுபட்டுப் போயிருப்பதாக நிச்சயிக்கிறேன். அடுத்த இதழில் இதற்கு ஒரு திருத்தம் அவசியம் வெளிவந்தால் நலம். இது நிற்க. ஸ்ரீரங்கநாத பாதுகாஸமீக்ஷா வெகு அத்புதமாக அமைந்துள்ளது. ஒவ்வொன்றும் ஆணித்தரமான பேச்சு. இதில் நவரஸங்களும் மலிந்திருப்பதாகக் காண்கிறது. சாஸ்த்ரார்த்தங்களை தாழாதே சார்ங்கமுதைத்த சரமழைபோல் பொழிந்திருப்பதைப் பலகால் ஸேவித்துக்கொண்டிருக்கிறேன். இனி மதுராந்தகர் 4, 5 வருஷங்களுக்குத் தலைகாட்டமாட்டார். பிறகு வழக்கம்போல் எழுதினவைகளையே எழுதத் தொடங்குவர். அந்த வகுப்பில் இது ஸஹஜமாய்விட்டது. கண்டனங்களில் ருசியில்லாதவர்களும் ருசிக்கத்தக்கது இந்த ஸமீக்ஷாக்ரந்தம்."

S. Raghavaiengar.

இந்த ஸ்ரீமுகத்தில் திருத்தவேண்டியதாகத் தெரிவித்திருக்கிற விஷயம் கவனிக்கப்பட்டது. மிகவும் வருந்தத்தக்க இந்த அச்சுப்பிழையை ஒவ்வொருவரும் தெரிவித்திருக்கவேண்டும். ஆனால் இந்த ஸ்வாமியொருவர்தாம் பரமகிருபையுடன் கவனித்துத் தெரிவித்தார்.

## அன்பர்கள் கவனிக்கவேண்டிய பிழை திருத்தம்.

ஸ்ரீராமாநுஜன் 121ல் 8-வது பக்கத்தில் சத்ருக்னாழ்வான்படி என்ற மகுடத்தின்கீழ் எழுதிவருகையில் (அந்த பக்கத்தின் கடைசிவரியில்) ஆகவே அவர் பகவத் விஷயத்தையும் விஷயாந்தரத்தோ என்று முடிந்திருக்கிறது. அடுத்த ஒன்பதாவது பக்கத்தின் ஆரம்பமானது

என்கிறபடியே என்றுள்ளது. இது ஸர்வாத்மநா அநந்விதம். 9-வது பக்கத்தின் ஆரம்பத்தில் 8-வரிகள் கம்போஸ் செய்யப்பட்டிருந்தும் அச்சில் விடுபட்டன.

அந்த 8 வரிகளாவன;—

---

டொக்க நினைத்திருப்பர். எப்போதாவது ஸ்ரீராமபிரானையும் அவர் ஸேவிக்க நேரு மாகில் தமக்கு உத்தேச்யமாக ஸேவிக்கமாட்டார். தமக்கு உத்தேச்யரான பரதாழ் வானுக்கு உத்தேச்யர் என்று இவ்வழியாலே ஸேவிப்பராம்.

பாகவத சேஷத்வத்தின் பெருமை.

இப்படிப்பட்ட நிஷ்டை விளைவது மிகவும் அரிது. விஷயாந்தரங்கள் தோஷங்களே வடிவெடுத்திருக்கிறபடியால் அந்த தோஷங்களை ஆராய்ந்து பார்த்து அவற்றை விட்டுத் தொலைக்கமுடியும். பகவத்விஷயம் அங்ஙனன்றிக்கே * ஸமஸ்த கல்யாணகுண அம்ருதோததியாக இருப்பதனாலும் * பும்ஸாம் த்ருஷ்டி சித்தாபஹாரிணம் *

---

இந்த எட்டுவரிகளையும் அங்கே சேர்த்துக்கொண்டு வாசித்தால்தான் விஷயம் ரஸிக்கும். இந்த ஸ்காலித்யத்தை ஊன்றிநோக்கியெடுத்துக்காட்டிய நம் ராகவையங்கார் ஸ்வாமிக்குத் தலையல்லால் கைம்மாறிலேன்.

## மதுரை S. சேஷாத்ரியாசார்யரின் கடிதம்.

3. மதுரை. யானைக்கல் போஸ்டாபீஸ் உத்யோகஸ்தர் ஸ்ரீ. உ. வே. S. சேஷாத்ரி ஐயங்காரென்னுமிந்த ஆப்தரைப்பற்றி முன்னம் சிறிது தெரிவிக்கவேண்டியது அவசிய மாகிறது. இவர் அஹோபிலமடத்து சிஷ்ய பரம்பரையில் சேர்ந்தவர். நல்லவிவேகி. வட மொழி தென்மொழி நூல்களில் நல்ல பரிசயமுள்ளவர். விஷயங்களை மத்யஸ்தத்ருஷ்டியுடன் ருஜுவாக கவனிப்பவர். ஒரு வருஷமாக இவர் நமக்கு அடிக்கடி யெழுதிவரும் கடிதங்களி னால் நாம் க்ரஹித்த விஷயமிது நேற்று 18—1—59ல் நாம் மதுரைக்குப்போயிருந்தபோது தான் முதன் முதலாக இவரைக்கண்டுபேச நேர்ந்தது. மிகச்சிறந்த ஸஹ்ருதயர். சென்ற ஜூன் ஜூலை ஆகஸ்டு மாதங்களில் நாம் வடநாட்டு யாத்திரை சென்றிருந்தபோது, நம்மு டைய தேசிக ஸஹஸ்ரநாம விமர்சத்திற்கு ஸ்ரீரங்கநாத பாதுகாபத்ரிகையில் ஏகதேசம் மறுப்பு வெளிவந்திருக்கிறதென்று நமக்கு (ஹரித்வாரத்தில்) தெரிவித்தவர் இவரே. "அந்த மறுப்பு பண்டிதரான வொருவர் எழுதக்கூடியதன்று" என்றும் அப்போதே இவர் தெரிவித் திருந்தார். மதுரையில் நாம் ஸ்ரீரங்கநாத பாதுகாஸமீக்ஷா எழுதும்போதும் அச்சிடும்போ தும் சிறிது உடனிருந்தார். இவருடைய கடிதம் இன்று கிடைத்திருக்கிறது; அதாவது—

ஸ்ரீ:

ஸ்வாமிக்குத் தாஸன் சேஷாத்ரி தெண்டனிட்டு விஜ்ஞாபிப்பது:—

தேவரீரை நேரில் ஸேவிக்கவேணுமென்ற அடியேனுடைய நெடுநாளைய மனோரதம் ஒருவாறு பூர்த்தியாயிற்று. தேவரீர் மதுரையில் தங்கியிருந்த இரண்டு தினங்களில் ஒரு சில நிமிடங்களே தேவரீருடன் நற்போதுபோக்க ப்ராப்தமானது அடியேனுக்கு ஒரு குறையே. இரண்டு நாளும் தேவரீருடைய உபந்யாஸங்களைக் கேட்க வந்திருந்தேன். மிக மதுரமான சாரீரத்தோடும், சந்தத்துடனும் ஸ்ரீஸூக்திகளை ஸாதித்தது அடியேன் காதுகளில் இன்னும் ரீங்காரம் செய்துகொண்டிருக்கிறது. தேவரீருடைய ஹிரண்யவர்ணத்திருமேனியில் ஊர்த்வபுண்ட்ரங்கள் சாற்றிப் பரம கம்பீரமாய் எழுந்தருளியபோது விஹகேஸ்வரஸம்ஹநேஷு ஸிம்ஹம்போலத்தான் அடியேன் மனதில் பட்டது. அடியேன் எழுதுவது அதிசயோக்தி யல்ல என்பதை ப்ராமாணிகர்கள் ஒப்புக்கொள்வார்கள். தேவரீர் திருக்காதுகளில் அணிந் திருந்த சங்கு சக்கர ரூபங்களில் இருந்த வைரக்கடுக்கன்களைக் கண்டதும் "ஆழிபோல் மின்னி வலம்புரிபோல் நின்றதிர்ந்து" என்பதே ஞாபகத்துக்கு வந்தது.

ஸ்ரீராமாநுஜன்—121 வந்து சேர்ந்தது. நவீன வித்வான்கள், ஒரு பெரிய லைப்ரெரி, 2, 3 அஸிஸ்டண்டுகள், ஒரு சில காபிஸ்டுகள் இத்யாதி உபகரணங்களோடுகூட பலநாள்களி

னும் சாதிக்கமுடியாததை தேவரீர் மதுரையில் சில நாழிகைகளில் தனியிருப்பில் ஸாதித்திருக்கிறீர்கள் என்றால் இதை என்னவென்று சொல்லுவேன் !

விமர்சபரீக்ஷா விமர்சனம் முழுதும் படித்துப் பார்த்தேன். பரமாத்புதமாக இருக்கிறது. ஸ்ரீஊ நாயவாஉ-ுகாவில் மதுராந்தகரின் விமர்சபரீக்ஷாவைப் பங்குனியில் பார்த்த போது அடியேன் மனதில் ஒன்று பட்டது. அதை இங்கு எழுதுகிறேன். அதாவது மதுராந்தகர் மத்வாசாரியரின் கீதாபாஷ்ய மங்களச்லோகத்தையும், ஸநுஸஂஉூஉாயெபஸூஸஃ-ஸூஂஉ ஊாயஃ என்றும் எடுத்துக்காட்டியதிலிருந்தே விமர்சபரீக்ஷாவின் ஸ்வரூபம் புலப்பட்டது. அப்பொழுது அடியேனுக்கு ஞாபகம் வந்த ''ஹுவஸிஶேஷிதஜயெஃ ஸவியெ ஸஜாத ஐஉஂஉரஂ ஜயுஉழ'' என்ற தேசிக ஸூக்தி கணக்கில்தான் இருக்கிறது மதுராந்தகரின் முழக்கம்.

ராஊ நூஜஉயாவாஆத்தனியன் விஷயமாகத் தேவரீரிடம் அனுபவம்பெற்ற மதுராந்தகஸ்வாமி இதற்கு பதில் எழுதமுடியும் என்று நினைத்து இறங்கியதுதான் பெரிய வியப்பு. திருவுள்ளூருக்கும் அடியேன் எழுதியிருக்கிறேன் (பதிலுக்காக, ஸ்டாம்பு வைத்தும்கூட). ஆனால் அங்கிருந்து எதிர்பார்க்க முடியாது. ''தயாராகிறது. அச்சிலிருக்கிறது. ஸிம்ஹங்கள் புறப்பட்டுக் கொண்டிருக்கின்றன'' என்றெல்லாம்தான் எழுதமுடியுமேதவிர வேறு ஒன்றும் இயலாது. சில நாள்களுக்குமுன்னர் அடியேனுக்கு பெரியாச்ரமத்திலிருந்து வந்த கடிதத்தில் ''விமர்சபரீக்ஷா முழுவதும் தனியே புத்தக உருவில் தயாராகின்றது; ஆனதும் அனுப்புகிறோம்'' என்றுதான் வந்தது. இவைகளெல்லாம் ஸங்கல்பமாத்ரமேயென்று என் துணிபு.

மதுராந்தகரின் விமர்சபரீக்ஷாவிற்கு இனி அஜ்ஞாதவாஸந்தான் ப்ராப்தம் என்று தோன்றுகிறது. இடையில் ஏதாகிலும் மடத்திலிருந்து உத்தரம் கிடைத்தால் உடனே தேவரீருக்குத் தெரியப்படுத்துகிறேன்.

இங்ஙனம்

அனந்தகோடி தெண்டனிடும்,

ஊாஸநு ஶேஷாத்ரி.

---

ஸ்ரீ:

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.
ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

**ஸ்ரீ காஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசார்ய ஸ்வாமியின்**

## விளம்பி மீன விசாகோத்ஸவப் பத்திரிகை

**ஸ்ரீஸ்வாமியின் அறுபத்தெட்டாம் திருநக்ஷத்திர பூர்த்தியை முன்னிட்டு**

ஸ்ரீகாஞ்சியில் ஸ்வாமியின் திருமாளிகையில்

**நாளது மாசிமீ 27௳ உத்தரட்டாதி முதல் பங்குனிமீ 15௳ திருவிசாகம் வரை**
(11-3-59) to (27-3-59)

வேதபாராயணம் திவ்யப்ரபந்தஸேவை ரஹஸ்யாநுஸந்தானம் ஸ்தோத்ரபாடம் வித்வான்களின் உபந்யாஸம் இவை பதினாறு நாட்கள் நடைபெறும்.

ஆப்தர்கள் அனைவரும் கூடியிருந்து சிறப்பாக நடப்பிக்கும்படி ப்ரார்த்தனை.

வேதபாராயண கோஷ்டிகள் கடந்த ஸம்வத்ஸரங்களிற்போலவே ஸாமவேதம், சுக்லயஜுஸ், யஜுர்வேதம் க்ரமாந்தம் திருவீதிவலத்துடன் நடைபெறும்.

திவ்யப்ரபந்த ஸேவை **17—3—59** தேதியிலிருந்து நடைபெறும்.

இங்ஙனம்:

காஞ்சீபுரம்,
20-2-59

ப்ரதிவாதிபயங்கரம் செல்வமணி என்கிற
**ரங்கநாத தாஸன்.**

ஸ்ரீ:

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்

    

# சிங்கப்பெருமாள்திருவாக்குவெற்றி

(ஸ்ரீகாஞ்சீ ஜகதாசார்ய ஸிம்ஹாஸநாதிபதி யெழுதியது)

---

## அடியேனுக்குக் கிடைத்த ஸ்ரீமுகமொன்றின் அநுவாதம்

1. நமது ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் அபிமானிகளான ஸகல ஸ்ரீவைஷ்ணவர்களுக்கும் *நீசனேன் நிறையொன்று மிலேனை அடியேன் அடிபணிந்து செய்யும் விண்ணப்பம். நேற்று (12—2—59௳) திருவல்லிக்கேணி வாஸியான பரமாப்தரான வொரு பண்டிதரிடமிருந்து ஒரு ஸ்ரீமுகம் கிடைத்தது. அதிலுள்ள வாசகங்களை ஏகதேசம் ஈண்டு எழுதுகிறேன் ;—

"காளிதாஸ மஹாகவி ரகுவம்சமஹாகாவ்யத்தில் நான்காவது ஸர்க்கத்தில் ரகுவின் திக்விஜய யாத்திரையை வெகு சிறப்பாக வருணிக்கிறார். அதில் பாரஸீக தேசத்தில் நடந்த யுத்தச் செய்தியைச் சொல்லும்போது, அங்கே பல யவனர்கள் ரகுமஹாராஜனிடம் பட்டபாட்டைக் கண்ட மற்றவர்கள் என்ன செய்தார்க ளென்பதை *அபநீத சிரஸ்த்ராணச் சேஷாஸ் தம் சரணம் யயு:* என்கிற ச்லோகத்தினால் தெரிவித்தார் மஹாகவி. அதாவது, அவர்கள் பட்டபாடு நாமும் படவேணுமோ? என்று அஞ்சிய மிச்சப்பட்டவர்கள் தம்தம் தலைப்பாகையைக் கழற்றிக் கீழேவைத்துத் தெண்டனிட்டு வாழ்ந்துபோனதாகச் சொன்னார். இதற்கு முன்னே ஸும்ஹ தேசத்தவர்களின் செய்தியைச் சொன்னபோதும் *ஆத்மா ஸம்ரக்ஷிதஸ் ஸும்ஹை: வ்ருத்திமாச்ரித்ய வைதஸீம்* என்றார். பெருவெள்ளம் பிரளயமாகப் பெருகும்போது வணங்கா மரங்களெல்லாம் வேரோடு பறியுண்டு பாறிப்போக, அப்பெருவெள்ளத்தில் நீர்வஞ்சிக் கொடிகள் தழைந்துகொடுத்துப் பிழைக்குமாபோலே கடற்கரைப் பகைவர்கள் வணங்கி வாழ்ந்து போனதாகச் சொன்னார். இதெல்லாம்...........இவர்க்குத் தெரிந்திருந்தும் வாழும்வகையறியாமே வழிதப்பிச் சென்றுவிட்டார். எதிரம்பு கோத்து முடிய முற்பட்டார். ஸ்ரீராமாயண ஸ்ரீபாகவதாதிகளில் ஸ்ரீராமக்ருஷ்ணாதிகளிடத்தில் அவரவர்கள் படுகிறபாடுகளைக் கட்கூடாகக் கண்டிருந்தும் 'விதிமாண்டால் விரியங்கத்திரி' என்கிற கதையாய் ஒவ்வொருவரும் விதிமாண்டு தாமாகவேவந்து விழுந்து மடிந்தபடியையே நினைப்பூட்டுபவரானார். 300, 400 ரூ. வரையில் செலவாகியிருக்கும் அச்சுக்கு. ஜகன்னாதத்தில் ஒரு குயவன் மூன்று வருடங்கள் பரிச்ரமப்பட்டுச் சட்டி பானைகள் செய்வனாம்; அத்தனையும் ஜகதீசன் மந்திரத்தில் ஒரேவேளையில் சுக்கலாய் விடுமாம். அதேபோல, தம் பிரபல பரிச்ரமங்களெல்லாம் ஒரு நொடிப்பொழுதில் பாழாகியொழியுமென்பதை உள்ளபடி உள்ளமறிந்துவைத்தும் பலநூறு ரூபாய்களைப் பாழாக்கின பரிதாபம் என்னென்பது!. *கரிணீ சிராய ஸூதே கமபி மஹீபாலலாலிதம் கலபம்* என்றபடி, தாமதித்தாலும் யானைக்குட்டி பிறந்ததுபோலிருந்தால் தேவலை. ஒவ்வோரெழுத்தும் க்ஷணபங்குர மசக மக்ஷிகா பிபீலிகைகளே ......."

(ஸ்ரீமுகத்தின் அநுவாதத்தை இவ்வளவோடு நிறுத்துவோம்.)

### கோதாநிலைய வெளியீடுகளிரண்டு கிடைத்தமை கூறுதல்

2. கீழே அநுவதித்த கடிதத்தின் கருத்தை அடியேன் புரிந்துகொள்ள முடியவில்லை. திருப்பித்திருப்பி வாசிக்கிறேன். இது யாரைநோக்கி யெழுதியது, யார் என்ன செய்திருக்கிருர் என்பது ஒன்றுமே தெரிந்துகொள்ள முடியவில்லை. க்ரமேண தெரிந்துகொள்வோம் என்றிருந்துவிட்டேன். இருக்கையில் இன்று (13-2-59ல்) "திரௌபதியும் திருநாமமும்" "ஆராய்ச்சித்திரள்" என்னும் பெயர்பூண்ட இருபுத்தகங்கள் தபால் மூலமாகக்கிடைத்தன. இரண்டும் சென்னை மயிலாப்பூர் கோதா நிலைய வெளியீடுகளாம். உலக நன்மைக்காக இவற்றை ஆராயவேண்டுவது நமது கடமையாதலால் இரண்டையும் ஆராயப்புகுகின்ருேம். ஸூசீகடாஹ ந்யாயத்தாலே மிகச்சிறிதான ஆராய்ச்சித்திரளை முன்னம் ஆராய்கின்ருேம்.

### அடியேன் இந்நூலுக்குப் பெயரிட்டதன் தத்துவம்

3. இப்போது நாம் ஆராயுமாராய்ச்சித்திரளில் ஆரம்ப வாக்கியங்களிவை;

"ஸ்ரீராமாநுஜன், அம்ருதலஹரீ என்னும் பத்திரிகைகளில் மாதந்தோறும் சிலர் உலகு உய்ய உண்மையை வெளியிடுவதாய்க் கருதி சில வியாஸங்களை வெளியிட்டுக்கொண்டிருக்கின்றனர். அவ்வியாஸங்களைக் கண்டு இவ் உலகு மருளாது உள்ளபடி உண்மையை உணர ஈண்டு இவ் ஆராய்ச்சித்திரள் எழுதி ப்ரசுரம் செய்யப்பெறுகிறது." என்று.

இதனல் இவ்வாராய்ச்சித்திரள் தோன்றியது அடியேனுடைய வியாஸங்களையே நோக்கியென்பது அறியவெளிதாதலால்,அடியேனுடையவியாஸம் ஒவ்வொன்றும் உலகமுய்ய உண்மையை யுணர்த்தவல்லவையே யென்பதை மூதலிக்கவேண்டுவது அடியேனது கடமையாயிற்று. இந்நூலுக்கு நாம் சிங்கப்பெருமாள்திருவாக்குவெற்றி யென்று பெயரிட்டதன் ஔசித்யத்தை உலகம்முழுதுமுணருமாதலால் ஈண்டு விவரிக்கத் தேவையில்லை. நமது *தானேயெழுதிய தன்சரிதையில் (பக்கம் 140—144லும்) ஸமீபகாலத்தில் நாம் வெளியிட்டுள்ள வைதிகலௌகிகமஹநீய மண்டலியில் தமிழநுபந்தத்தில் 33—36 பக்கங்களிலும் விசதமாகும். சிங்கப்பெருமாள் ஸ்வாமியின் அமுதவாக்குக்கு விஜயஸ்தம்பமிது.

### ஆராய்ச்சித்திரளில் விப்ரலம்பவிசதீகரணம்

4. இப்போது நாம் ஆராயத்தொடங்கிய சிறுசுவடியில் ஸ்ரீமதேராமாநுஜாய நம: என்றவுடனே "ஆச்சான்பிள்ளை ஆசார்யரிடம் அடிபணிந்து அரும்பொருள் அறியாதவரா? (1)" என்று கொட்டையெழுத்தில் மகுடமிட்டு, இளையபெருமாள் அஸத்யவாதியேயென்று ஸ்தாபிக்க முயன்றுள்ளார் விவாதஸ்வாமி. மேலே (பக்கம் 10ல்) "பரதாழ்வான் நிஷ்டையின் ஏற்றத்தை விளக்கும் ஸந்தர்ப்பத்தில் தானே பெரியவாச்சான்பிள்ளை (பரதாய மஹாத்மநே) என்ற இடத்தில் (அஹம் ஸர்வம் கரிஷ்யாமி) யென்னும் வாக்கியத்தையெடுத்து 'இலக்குமணன் பொய்யன்' என்று அருளிச் செய்திருக்கிருர்" என்று அழகாக எழுதியுள்ளார். இங்கு விப்ரலம்பமும் விபரீதஜ்ஞானமும் கூடிக்குலாவிக் களிநடம்புரியுமழகைக் கண்ணுடையார் காணவேணும். விப்ரலம்பமாவது வஞ்சித்தல்; இங்கு என்ன வஞ்சனை யென்னில்; லக்ஷ்மணனை அஸத்யவாதியாகத் தாம் மருண்டதோடு நில்லாமல், பெரியவாச்சான்பிள்ளையும் இலக்குமணன் பொய்யன் என்று அருளிச் செய்திருப்பதாக வாக்யவிந்யாஸம் செய்வது மஹத்தான வஞ்சனை. சிலர் பாமர ப்ரதாரணம் செய்வதுண்டு; இவ்வார்த்தையினல் பாமரர்களுங்கூட வஞ்சிக்கப்பெருர்கள். இளையபெருமாள் சேஷத்வத்திற்குச் சேராதபடி செய்தார் என்று பெரியவாச்சான்பிள்ளை யருளிச்செய்திருப்பதுண்டே யொழிய

'ஸத்யவாதித்வத்திற்குச் சேராதபடி செய்தார்' என்றோ 'அஸத்யம் சொன்னார்' என்றோ 'பொய்யரானார்' என்றோ அணுவளவும் எழுதிற்றில்லை. பெரியவாச்சான்பிள்ளையோ, வேறு எந்த ஆசார்யரோ அப்படி ஓரிடத்திலாவது அருளிச் செய்திருப்பதாக இவர் எடுத்துக்காட்டிவிட்டால் நம்மை யிவர் அறிவிலி செய்து கொள்ளலாமே ஸதாசார்யரிடம் அடிபணிந்து அரும்பொருள் கேட்டுணர்ந்த பெரியவாச்சான்பிள்ளைக்கு இவர் தம்முடைய மருளை ஆரோபிக்கப் பார்ப்பது மஹத்தான ஸாஹஸம். ஆரோபித்தாலும் அங்கு ஏறுதுகிடீர்.

### ஆராய்ச்சித்திரளில் விபரீதஜ்ஞாநவைபவ விசதீகரணம்

5. "விப்ரலம்பமும் விபரீதஜ்ஞானமும்" என்று நாம் ப்ரதிஜ்ஞை செய்ததில் விப்ரலம்பத்தை விளக்கினோம். இனி விபரீதஜ்ஞானத்தை விளக்குவோம். இந்த ஸ்வாமி யெழுதியுள்ளார்-"*பரதாய மஹாத்மநே-என்ற இடத்தில் பெரியவாச்சான்பிள்ளை அஹம் ஸர்வம் கரிஷ்யாமி யென்னும் வாக்யத்தை யெடுத்து ............" இத்யாதி. அந்தோ! இத்தகைய மருள்கள் பேச்சளவோடு நிற்கலாகாதா? 'பரதாய சிகாமணே' என்று பேசினாலும் 'அடியேனடியேன்' என்று கை கூப்பியும் தலை துலுக்கியும் கேட்டுக் கொண்டு போவாருளர்; அஸம்பத்தமாக எழுதி வைத்தால் எல்லாருமே பார்த்துக் கொண்டு போவர்களோ? *ராகவாய மஹாத்மநே* என்று ஸ்ரீராமாயணத்தில் கேட்டதுண்டு; *பரதாய மஹாத்மநே* என்று இதுகாறும் கேட்டதில்லையே. இவரெடுத்துக் காட்டுமிடமான பெரியதிருமொழி—*கண்ணனூர் கண்ணபுரமென்னும் பாட்டின் வியாக்கியானத்திலே பெரியவாச்சான்பிள்ளை *பரதாய மஹாத்மநே* என்று ப்ரதீகமெடுத்துக் காட்டிற்றுமில்லையே. கண்ணுடையார் காணலாமே.

### விவாதஸ்வாமியின் ப்ரமாணப்ரதர்சந வைகரீவிவரணம்

6. ராமாயணஸாரம் சொல்லுகிறேனென்று தொடங்கி ராமாயண ச்லோகமொன்றையும் தொடாமலும், கீதாஸாரம் சொல்லுகிறேனென்று தொடங்கி கீதாச்லோகமொன்றையும் தொடாமலும் காடு பாய்ந்து பேசக்கற்ற பத்ததியை இங்கும் அவலம்பித்து ச்லோகமொன்றையும் தொடாமலே யெழுதிப்போனால் எவ்வளவோ கௌரவமாயிருக்குமே. "ஸ்ம்ருதஸ்ய உபேக்ஷாநர்ஹத்வாத்" என்கிற ரீதியிலே இங்கு ஸ்ம்ருதமானதொன்று தெரிவிக்கலாகிறது.

"வால்மீகயே மஹர்ஷயே ஸந்திதேசாஸநம் தத:" என்கிற ஸ்ரீராமாயண ச்லோகத்தை இந்த ஸ்வாமி உபந்யாஸங்களில் 'வால்மீகியே மஹர்ஷயே' என்று சொல்லுவதும், [மஹர்ஷயே ஆஸநம் வால்மீகியே ஸந்திதேச] வந்த மஹர்ஷியின் பொருட்டு, வால்மீகியே—வால்மீகிதாமே, ஆஸநம் ஸந்திதேச—ஆளிட்டு அந்திதொழாமே தாமே நேராக ஆஸனமிட்டார் வால்மீகி. என்று பொருள் கூறுவதும் வழக்கமென்று கேட்டிருந்தோம். இது ஏதோ விநோதமாகச் சொன்னபடியாயிருக்குமென்று நாம் நினைத்திருந்தோம். நேற்று கிடைத்த புநர்வஸு பத்ரிகையில் 'ராமாயணஸாரம்' என மகுடமிட்டு இவரெழுதுகையில் "வால்மீகியே மஹர்ஷயே" என்றே ஸுஸ்பஷ்டமாக வுள்ளமை கண்டு தெளிந்தோம். "அங்கண்மாஞாலத்தரசரபி—மானபங்கமாய்" என்றெடுத்து, "அரசரபி—அரசர்களுங்கூட" என்று உபந்யஸிப்பாருமுளரே. ப்ராஸங்கிகமானவிது நிற்க. இவர் உதாஹரிக்கும் வசனமெல்லாம் விபரீதஜ்ஞானத்திற்கு விஜயத்வஜமாயிருப்பது போலவே விவரிக்கும் பொருளும் விபரீதஜ்ஞானத்தையும் விப்ரலம்பத்தையும் விளங்கக் காட்டியே நிற்குமென்பதைப் பலகாலும் நிரூபித்து வருகிறோம்.

## ஸாமாந்யதஸ் ஸத்யவாதித்வ ஸ்வரூபகீர்த்தனம்

7. இளையபெருமாள் அஸத்யவாதியானுர்—என்கிற அஸம்பத்தமான வார்த்தையை ஏதோ ப்ரமாதாத் சொல்லிவிட்டேனென்று ஒரே வார்த்தையில் முடித்திட்டு கௌரவத்தை ரக்ஷித்துக் கொள்ளலாமாயிருக்க, அந்த அஸமஞ்ஜஸப்பேச்சை ஸ்தாபிக்க முயல்வது . முயலுக்கு மூன்றேகொம்பென்று ஸ்தாபிக்க முயல்வது போன்றதே. இதில் நன்கு தெளிவு பிறக்கும்படி விவரிக்கிறோம். ஸத்யவாதித்வமாவது என்ன? என்பதை முன்னம் தெளிந்து கொண்டால் அஸத்யவாதித்வமாவது இன்னதென்று எளிதாக விளங்கிவிடும். கீதையில் (17—15) *அநுத்வேககரம் வாக்யம் ஸத்யம் ப்ரியஹிதஞ்ச யத்* என்றவிடத்து தாத்பர்ய சந்த்ரிகையில் "ஸத்யம்........... ப்ராகேவ தர்சிதம்" என்ருர் தேசிகன். முன்னே காட்டிற்று எங்கேயென்று பார்க்குமளவில், (10—4) *க்ஷமா ஸத்யம் தமச் சம:* என்றவிடத்து பாஷ்யத்தில் "ஸத்யம்—யதாத்ருஷ்டவிஷயம் பூதஹிதரூபம் வசநம்" என்றுள்ளதைக் காணவேணும். கண்டது கண்டபடியே சொல்லும் பூதஹிதமான வார்த்தையே ஸத்யமென்றதாயிற்று. இப்படியல்லாதது அஸத்யமென்று எளிதாகத் தேறும். ஒருவன் ஒரு பெரியவரிடத்தில் 'அடியேன் நாளை காலை தேவரீரிடம் வருகிறேன்' என்று சொல்லி வைத்து வராமற்போனுல் அதுகொண்டு அவனை அஸத்யவாதி யென்பாரில்லை. வஞ்சகனென்னலாம். வாராமலிருந்து "அடியேன் வந்து பார்த்தேன், தேவரீர் இல்லை" என்று சொன்னுகில் அதையே அஸத்யமென்பர்கள்.

## ஸீதாலக்ஷ்மணர்களிடத்தில் அஸத்யாரோபண ப்ரஸங்கம்

8. ஸ்ரீராமாயணத்தில் பல ஸந்தர்ப்பங்களை யெடுத்துக் காட்டுகிறோம், காண்மின். காட்டுக்குப் புறப்படுவதற்குமுன் பிராட்டி *அக்ரதஸ் தே கமிஷ்யாமி ம்ருத்நந்தீ குசகண்டகாந்* என்றாள். பெருமாளுக்கு முன்னே தான் நடந்து செல்வதாகக் கூறினாள்; அதன் ப்ரயோஜனத்தையும் கூறினாள். அதாவது குசகண்டகமர்தநம். இப்படிச் சொன்னவள் குசகண்டகமர்தநம் செய்து கொண்டு முன்னே போனதுண்டோவென்று பார்த்தால், இல்லை. *அக்ரத: ப்ரயயௌ ராம: ஸீதா மத்யே ஸுமத்யமா* என்ருர் வால்மீகி. தனக்குப் பெருமாள் குசகண்டகமர்தநம் பண்ணுவாராய் முன்னே செல்லவும் பிராட்டிதான் பின்னே செல்லவுமாயிற்று. *அக்ரதஸ் தே கமிஷ்யாமி* என்று பிராட்டி மட்டும் சொன்னாளில்லை; இளையபெருமாளும் சொல்லிற்றுண்டு—*அக்ரதஸ் தே கமிஷ்யாமி பந்தாநமநுதர்சயந்* [அயோ. 31—25] என்றது காண்க. அவராவது முன்னே போயிற்றுண்டோவென்னில்; *அக்ரத: ப்ரயயௌ ராம:* என்று கீழே யெடுத்துக் காட்டிய ச்லோகத்தின் பிற்பாதி—*ப்ருஷ்டதஸ் து தநுஷ்பாணிர் லக்ஷ்மணோநுஜகாம ஹ* என்பதன்ரு. முன்னே செல்வதாகச் சொல்லிப் புறப்பட்டவிவர்கள் பின்னே சென்றார்களென்பது திடமாகத்தேறுதலால் இதுகொண்டிவர்களை அஸத்யவாதிகளென்னவேணுமிவர்.

## பெருமாள்பக்கலில் அஸத்யாரோபண ப்ரஸங்கம்

9. அசோகவனத்தில் பிராட்டியைக் கண்டுவந்ததிருவடி *ஊர்த்வம் மாஸாத் ந ஜீவேயம்* என்று பிராட்டி சொன்னதாகப் பெருமாளிடம் கூறினர். அது கேட்ட பெருமாள் *சிரம் ஜீவதி வைதேஹீ யதி மாஸம் தரிஷ்யதி* [பிராட்டி ஒரு மாதம் ஜீவிக்க வல்லளாகில், ஒருமாதமென்று என்ன? நெடுங்காலம் ஜீவித்திருக்க வல்லவளே] என்று சொல்லி, *ந ஜீவேயம் க்ஷணமபி விநா தாம் அஸிதேக்ஷணாம்* என்று தம் படியைத் தெரிவித்தார். *மையார்கருங்கண்ணியான அவளைவிட்டு ஒரு நொடிப்பொழுதும் நான் ஜீவித்திருக்கமாட்டேன் என்றார்.

இங்ஙனே சொன்னவர் அடுத்த க்ஷணத்தில் உயிர்மாய்ந்திருக்க வேண்டுமே; மாய்ந்ததுண்டோ? பம்பைக்கரையில் பரிதபித்தபோது *ஜீவேயம் கலு ஸௌமித்ரே! மயா ஸஹ ஸுமத்யமா, ஸேவதே யதி வைதேஹீ பம்பாயா: பவநம் ஸுகம்* [லக்ஷ்மணா! பிராட்டி இங்கு என்னோடு கூடியிருந்து பம்போபவந பவந ஸேவைபண்ணினால்தான் நான் ஜீவிப்பேன்] என்றார் பெருமாள். பிராட்டி அங்குவந்து பவநஸேவை பண்ணிற்றுண்டோ? பெருமாள் ஜீவியாமலிருந்தது தானுண்டோ? என்று வினவினால் திசைதொறும் நோக்கி நிற்பரே. பெருமாள் மாரீசவதம்பண்ணித் திரும்புகையில் எதிரேவந்த இளையோனை நோக்கித் திடுக் கிட்டு *யதி ஜீவதி வைதேஹீ.......ப்ராணாந் த்யக்ஷ்யாமி லக்ஷ்மண! *விநசிஷ் யாமி லக்ஷ்மண* [பர்ணசாலையில் பிராட்டியைக் கண்டிலேனாகில் உடனே உயிரை விட்டிடுவேன், மாய்ந்திடுவேன்] என்றவர் பர்ணசாலையிற் சென்று பிராட்டியைக் கண்டதுண்டோ? உயிரை விட்டதுண்டோ? இதெல்லாம் அஸத்ய வாக்குத்தானே? என்று வினவினால் 'சிர:கண்டூயநம் கதி:' அத்தனையேயிறே. "பிராட்டி முற்படப்பிரிந்தது,........நடுவில் பிரிந்தது,........அநந்தரம் பிரிந்தது" என்கிற ஸ்ரீவசநபூஷண திவ்யஸூக்திப்படி நேரும் பிரிவுகளிலெல்லாம் தரித்து ஜீவித்திராமல் கடலிலே புக்குமாய்ந்தாரோ? ஸரயுவிலே விழுந்து மடிந்தாரோ? *ஊருந்துஞ்சிற்று உலகமும் துயின்றது ஒளியவன் விசும்பியங்கும் தேரும் போயிற்றுத் திசைகளும் மறைந்தன செய்வதொன்றறியேனே* என்று அநுஸந் தித்துத் தன்னடையே மாய்ந்துபோன பொன்னாச்சியாரைத்தானொத்தாரோ? *ந ஜீவேயம் க்ஷணமபி விநாதாம்* என்று சொல்லி நெடுங்காலம் ஜீவித்திருந்த பெருமாளை அஸத்யவாதி யென்னவேண்டாவோவென்று வினவினால் *நின்று நின்று நையும் நெடுங்கண்கள் பனிமல்கவே* என்னும் நிலைமையையன்றோ காட் டுவர் நம் ஸ்வாமி. மேலும் *அநந்யா ஹி மயா ஸீதா பாஸ்கரேண ப்ரபா யதா* என்று சொல்லும் பெருமாள் பிராட்டியைப் பிரிந்திருந்ததாக நினைத்தபடிதான் எங்ஙனே? என்று கேட்டால் இப்பிறப்பில் விடைதர இயலாதே. இக்கேள்வி யொன்றுமட்டும் ப்ரக்ருதம் அநபேக்ஷிதம் என்று விட்டிடுவோம்.

### பெருமாளுடைய ஸத்யவாக்த்வ சோதநம்

10. *அந்ருதம் ந ஹி ராமஸ்ய கதாசிதபி ஸம்மதம்* என்று வான்மீகி வாயினாலும், *அந்ருதம் நோக்தபூர்வம் மே ந ச வக்ஷ்யே கதாசந* என்று தம்திருவாக்கினாலும் ஸத்யவாதித்வப்ரக்க்யாதி பெற்றவரான பெருமாள் எத்தனை காரியங் களைத் தாம் செய்வதாகச் சொல்லிச் செய்யாதுவிட்டிருக்கிறாரென்று பார்த்தால் பலபல தேறும். அவற்றின் சிட்டாவொன்று இந்த ஸ்வாமியே ஸித்தப்படுத்த லாம். இளையபெருமாளை அஸத்யவாதி யென்னுமிவர் ஸத்யாஸத்ய ஸ்வரூபங் களை நன்குணர்ந்தவராகையாலே இவரே அதற்கு அதிகாரி. *ந ஸ்மரத்யபகா ராணாம் சதமப்யாத்மவத்தயா, கதஞ்சிதுபகாரேண க்ருதேநைகேந துஷ்யதி* என்பது பெருமாளுடைய பெருமைகளில் தலையானதொன்று. ஒருவர் நூற்றுக் கணக்கான அபகாரங்கள் பண்ணினாலும் அதை நெஞ்சாலும் நினையார் என்று புகழ்பெற்ற பெருமாள் ஸுக்ரீவ மஹாராஜரோடே அக்நிஸாக்ஷிகமாக ஸக்க்யம் பண்ணிவைத்து, அவர் வந்துசேர ஸ்வல்பம் தாழ்த்தாரென்ன *ஹநிஷ்யாமி ஸபாந் தவம்* என்றார்; வாலியைக்கொன்ற நான் அவனைமட்டும் கொன்றேன்; ஸுக் ரீவா! உன்னை அங்ஙனன்றிக்கே உற்றாருறவினரோடுங் கொல்லப்போகிறேன் என்றார். *நஸ்மரத்யபகாராணாம் சதமபி* என்றதற்கும் இதற்கும் ஏதேனும் சேர்த்தியுண்டோ? என்கிற கேள்வி கிடக்கட்டும். *ஹநிஷ்யாமி ஸபாந்தவம்* என்றவர் அங்ஙனே செய்து தீர்க்கவேண்டாவா? *ஸாகரம் சோஷயிஷ்யாமி* என்றவர் கடலை உடனே வற்றச்செய்திருக்க வேண்டாவோ? செய்ததுண்டோ?

### பெருமாளுடைய அஸத்யவாதித்வ ப்ரவாஹப்ரதர்சநம்

*11.* ஆரண்யகாண்டத்தில் (64—76) *புரேவ மே சாருததீமநிந்திதாம்* என்னும் ச்லோகத்தில் 'பிராட்டியை முன்னிருந்தபடியில் எள்ளளவும் வழுவாமே இன்று கொணர்ந்து கொடாவிடில் [*ஸதேவகந்தர்வமநுஷ்யபந்நகம் ஜகத் ஸசைலம் பரிவர்த்தயாம்யஹம்*] தேவகந்தர்வ மநுஷ்யாதிகளோடுகூடிய ஜகத்தையெல்லாம் இதோ தலைகீழாக்கிவிடுகிறேன் என்று பிரதிஜ்ஞைசெய்த பெருமாள்வாய்ச் சொல்லோடு நின்றது அஸத்யவாதியென்று நிலைநிறுத்தமாட்டாதா? இதெல்லாம் கிடக்க; ஒரு முக்கியமான விஷயம் கேளீர் ஆரண்யகாண்டம்—ஸர்க்கம் 16ல் இளையபெருமாள் பரதாழ்வானைப் புகழத்தொடங்கி அதிலிருந்து கைகேயியை நிந்திக்கப்புக்கவாறே பெருமாள் *ந தேம்பா மத்யமா தாத கர்ஹிதவ்யா கதஞ்சந* [பரதாழ்வானது பெருமையை எத்தனையும் சொல்லிக்காண்; கைகேயியைச் சிறிதும் வசைகூருதே] என்றார்; இப்படிப்பட்ட பெருமாள் தாமே எத்தனை யிடங்களில் கைகேயியை வசைகூறியிருக்கின்றார் தெரியுமோ? தமக்குக் கஷ்டம் நேரும்போதெல்லாம் கைகேயியை கர்ஹிப்பதுதான் பெருமாளுடைய முதல்காரியம். மாரீசவதம்பண்ணிப் பர்ணசாலையில் வந்து செய்தியறிவதற்கு முன்னமே வழியிடையில் இளையோனோடு பேசுகையில் *ஸீதாநிமித்தம் ஸௌமித்ரே! ம்ருதே மயி கதே த்வயி, கச்சித் ஸகாமா ஸுகிதா கைகேயீ ஸா பவிஷ்யதி* [லக்ஷ்மணா! பிராட்டிக்காக நான் உயிர் துறக்க, நீ தனியே ஊர் சென்று சேருவாயாகில் அந்த கைகேயியானவள் தன் எண்ணம் நிறைவேறி இன்புறுவளா?] என்று பெருமாள் கேட்கிறார். இது கைகேயியிடத்தில் பெருமாளுக்குத் திருநாபியிலூறியுள்ள மாச்சரியத்தை நன்கு காட்டவில்லையா? இவ்விடத்தில் கோவிந்தராஜார்யர் வியாக்கியான மெழுதுகிறார்—(அவருடைய ஸம்ஸ்க்ருத வாக்யத்தின் பொருள் அப்படியே தெரிவிக்கப்படுகிறது;)

> இங்கு 'ஸகாமா' என்றதனால் கைகேயியானவள் தம்மை [பெருமாளை] விநாசத்திற்காகவே காட்டுக்கனுப்பியதாக எண்ணம் பெருமாளுடைய உள்ளத்தில் எப்போதும் ஊறியிருக்கின்றது; அந்த உட்கருத்தானது இப்போது *ஸுப்தமத்தப்ரகுபிதாநாம் ஸ்வபாவஜ்ஞாநம் த்ருஷ்டம்* என்னும் நியாயத்தாலே வெட்டவெளிச்சமாகக் காட்டப்பட்டு விட்டது.

என்பது கோவிந்தராஜ வியாக்கியானத்தில் காணும் விசேஷார்த்தம். இங்கு *ஸுப்தமத்தப்ரகுபிதாநாம் ஸ்வபாவஜ்ஞாநம் த்ருஷ்டம்* என்கிற நியாயத்தை யெடுத்துக் காட்டியிருப்பதானது, பெருமாள் கைகேயியினிடத்தில் தமக்குள்ள மாச்சரியத்தை உள்ளடக்கி வைத்திருந்தும் இந்த ஸந்தர்ப்பத்தில் அவசமாக வெளிப்படுத்த நேர்ந்து விட்டதென்பதை விளக்கித் தீருகின்றது. இதனால் பெருமாளிடத்தில் அஸத்யவாதித்வம் எவ்வளவு ஊர்ஜிதமாகின்றதென்பதை விவேகிகள் உற்று நோக்கவேணும். காட்டுக்குப் புறப்படும்போது *வநவாஸோ மஹோதய:* என்று சொன்னதும் அஹ்ருதயம்; கைகேயியை கர்ஹித்த இளைய பெருமாளை நோக்கி அதைக் கண்டித்ததும் அஹ்ருதயம் என்று தேறுவதால், இளையபெருமாள்மட்டும் அஸத்யவாதியல்ல, முத்தண்ணாவும் அஸத்யவாதியே என்பது இந்த ஸ்வாமியால் நிலைநாட்டப்பட்டதாகுமன்றோ.

### நம்முடைய தெளிவில் குறைவில்லாமை கூறுதல்

*12.* ஆரியர்காள்!, இடையில் ஒரு விஜ்ஞாபனம். இப்போது நாம் ஸ்ரீராமாயணத்திலிருந்து பல ப்ரகரணங்களை யெடுத்துக்காட்டி சோத்யம் வெளியிட்டிருக்கிறோம். மேலும் எடுத்துக்காட்ட நேரும். இவற்றைக்கொண்டு ஸ்ரீராமாயண ப்ரமேயங்களில் நமக்கு ஏதோ விப்ரதிபத்தியிருப்பதாக ஒருவரும் கருத

லாகாது. நம்முடைய அபூர்வ ராமாயணம் முதலான பல நூல்களில் ஸமந்வயங்களை இனிதாகக் காட்டியுள்ளோம். அன்றியும், *ராஜ்யாத் ப்ரம்சோ வநே வாஸோ நஷ்டா ஸீதா ஹதோ த்விஜ:, ஈத்ருசீயம் மமாலக்ஷ்மீர் நிர்தஹேதபி பாவகம்* என்று பெருமாள் ஸீதாவியோக ஸமநந்தரத்திலே கதறுகிற படியைக் கண்டால் 'வநவாஸோ மஹோதய:' என்று முன்பு சொன்னது அர்த்த சூந்யமாகிறதேயென்று நம்பிள்ளை தாமே சங்கித்துக் கொண்டு அற்புதமாக அருளிச் செய்துள்ள ஸமாதானத்தை ஈட்டிலே ஸேவித்து நினைந்துநைந்துள் கரைந்துருகி யிருக்குமடியேன்போல்வார்க்கு விப்ரதிபத்திலவலேசமுமுதிக்க ப்ரஸக்தியில்லை. இளையபெருமாள் *அஹம் ஸர்வம் கரிஷ்யாமி* என்று சொல்லி வைத்துப் படைவீட்டுக்குத் திரும்பிச் செல்லும்படியான நியமனத்தை அதிலங்கித்தபடியாலே அவர் பொய்யராய் விட்டார் என்று அநுவதிக்கவும் அருவருக்கும்படி யெழுதியிருக்கும் ஸ்வாமியின் கருத்தாலே ஸ்ரீராமாயணத்தில் பல பேர்கள் அஸத்யவாதிகளாகவே தேறுவர்கள் என்று நாம் நிரூபித்துக் காட்டுகிறபடி. *யச்சோபயோஸ் ஸமோ தோஷ: பரிஹாரோபி வா ஸம:* என்கிற ப்ரக்ரியையிலே, பெருமாள் முதலானோர் அஸத்யவாதிகளல்லர் என்று நிரூபிக்கப்படுமாகில் அந்த நிரூபணம் இளையபெருமாளுக்கு இவரால் நேர்ந்த அவத்யத்தையும் எளிதாகக் களைந்தே தீரும் என்று அறுதியிடக்கடவது.

### ப்ரஸங்காத் தசரதாத்மஜர்களின் ஸ்வரூபநிரூபணம்

13. உலகத்திலும் சாஸ்த்ரத்திலும் குற்றங்கள் வெவ்வேறுபட்டவையாகக் காணப்படுகின்றன. ஹிம்ஸை செய்வது, வஞ்சனை செய்வது, களவு செய்வது, பொய் சொல்லுவது, குருத்ரோஹம் செய்வது......... என்றிங்ஙனே பலபடியாகக் குற்றங்கள் பேசப்படுகின்றன. இவற்றின் ஸ்வரூபத்திலே மாருட்டம் கொள்பவர்கள் தெளிவில்லாதவர்களெனப்படுவர். அவர்களையே அக்கிலி பிக்கிலியென்பது. ப்ரக்ருதம் இளையபெருமாள்மீது ஒரு குற்றம் சாட்டப்படுவது நம்முடைய ஆசார்ய கோஷ்டியிலேயேயுள்ளது. ஸ்ரீராமாயண புருஷர்கள் நால்வரும் நான்கு தருமங்களை அனுட்டித்துக்காட்ட அவதரித்தனர் என்று அவதாரிகையிட்டு பெருமாளை ஸாமாந்யதர்மநிஷ்டராகக்கூறி, லக்ஷ்மண பரத சத்ருக்நர்களை உத்தரோத்தரம் மேம்பட்டவர்களாக நிரூபித்தருளியுள்ளார்கள் நம் ஆசார்யர்கள். கண்ணிநுண் சிறுத்தாம்பு வியாக்கியான ப்ரவேசத்தில் "பித்ருவசநபரிபாலநாதிகளாலே ஸாமாந்யதர்மத்தை யநுஷ்டித்தார் பெருமாள்; நிருபாதிகசேஷியைக் குறித்து சேஷபூதன் கிஞ்சித்கரித்துத் தானுளனாகக் கடவன் என்கிற விசேஷ தர்மத்தை யநுஷ்டித்தார் இளையபெருமாள். [*அஹம் ஸர்வம் கரிஷ்யாமி*] நிர்ப்பந்தித்து அடிமை செய்கையன்றிக்கே சேஷியுகந்த வடிமையே சேஷபூதனுக்குக் கர்த்தவ்யமென்னுமிடத்தை யநுஷ்டித்தார் ஸ்ரீபரதாழ்வான். பகவச்சேஷத்வ காஷ்டையான ததீய சேஷத்வத்தை யநுஷ்டித்தான் ஸ்ரீசத்ருக்நாழ்வான்." என்கிற ஸ்ரீஸூக்திகளைக் காணலாம். இவற்றால், பெருமாளைக்காட்டிலும் இளையபெருமாளுக்கு ஏற்றமும், அவரைக் காட்டிலும் பரதாழ்வானுக்கு ஏற்றமும், அவரையுங் காட்டில் சத்ருக்நாழ்வானுக்கு ஏற்றமும் விளங்காநின்றன. 'இளையபெருமாள் பொய் சொன்னவர், பரதாழ்வான் பொய் சொல்லாதவர்' என்கிற ப்ரஸ்தாவம் ஒரு ஆசார்யர் திருவாக்கிலும் வந்ததில்லை; வருவதற்கு ப்ரஸக்தியுமில்லை. விப்ரலம்ப வார்த்தைகள் விலைசெல்லமாட்டா.

### பெரியவாச்சான்பிள்ளை திருவுள்ளத்தை நன்கு உபபாதிப்போம்

**14.** *அஹம் ஸர்வம் கரிஷ்யாமி* என்ற இளையபெருமாளுக்கு ஸகலவித கைங்கரியங்களையும் செய்வது உத்தேச்யம். கைங்கர்யத்திற்கு சேஷியினுடைய

முகோல்லாஸமொழிய வேறொரு பலன் கிடையாது. 'லக்ஷ்மணா! நீ நாட்டிலேயே யிரு' என்று நியமித்த பெருமாளுக்கு நாட்டிலிருப்பு அபிமதமாகக் காண்கை யாலே நாட்டிலிருக்க வேண்டியது ப்ராப்தம். அப்போதும் கைங்கர்யத்திற்குக் குறையில்லை. நாட்டிலிருப்புத்தானே ஸ்வயம் கைங்கர்ய ரூபமாகையாலே. இங்ஙனேயிருக்க, இளையபெருமாள் ஏன் இது செய்யவில்லை? என்று விமர்சிக்க ப்ராப்தம். இதில் ஒரு மருமம் வெளிவருகின்றது. கேண்மின்; *ந ச ஸீதா த்வயா ஹீநா ந சாஹமபி ராகவ!, முஹூர்த்தம், அபி ஜீவாவோ ஜலாந்மத்ஸ்யாவிவோத்த்ருதௌ* என்கிற இளையபெருமாளுடைய ச்லோகத்தை வியாக்கியானித்தருளும் நம்மாசார்யர்கள் ஒருமருமத்தையமைத்து உரைசெய்தருளினர்கள். இந்த ச்லோகத்தை ஏகவாக்யமாக வைத்து வியாக்கியானம் செய்தருளவில்லை. அப்படியானால் இரண்டு நஞ் அந்வயிக்கமாட்டாதென்று வாக்யபேதம் பண்ணியே உரை செய்தருளினர்கள். "ஹே ராகவ! த்வயா ஹீநா ஸீதா ச ந, (த்வயா ஹீந:) அஹமபி ந; அபிஜீவாவ:, முஹூர்த்தம். ஜலாத் உத்த்ருதௌ மத்ஸ்யாவிவ. 'அபிஜீவாவ:' என்றது—யதி ஜீவாவ: என்றபடி. தேவரை யொழிந்தவன்று பிராட்டியுமுளளாகாள், அடியேனுமுளனாகேன். முதலிலே ஜீவிக்குமதுதானில்லை ஜீவித்தோமோ, முஹூர்த்த காலம் ஜீவிப்போமத்தனை. [முஹூர்த்தமென்றது ஒரு க்ஷணகால மென்றபடி.] ஜலத்தைப் பிரிந்த மத்ஸ்யம் ஜீவிப்பது நீர்நசையறுமளவுமிறே; அப்படியே, நில்லென்று சொன்ன வார்த்தை உம்முடைய திருவுள்ளத்திலேயுமுண்டென்று அறியுமளவுங் காணும் நாம் ஜீவிப்பது." இது *நும்மைத்தொழுதோம் வியாக்கியானத்தில் பெரிய வாச்சான்பிள்ளை யருளியது. ஈட்டுப்ரவேசத்திலும் இங்ஙனேயுள்ளது. சிறிது வாசி; "நீர் நிறுத்திப் போகிறீரென்கிற வார்த்தை உம்முடைய திருவுள்ளத்திலேயுண்டென்று அறியுமளவுங்காணும் நாங்கள் ஜீவிப்பதென்றீரிறே" என்றீட்டிலுள்ளது. ஸ்வல்பசப்தபேதமேயொழியப் பொருளில் வாசியில்லை. "நில்லென்று சொன்ன வார்த்தை உம்முடைய திருவுள்ளத்திலேயுமுண்டென்று அறியுமளவும் நாங்கள் ஜீவித்திருப்போம்" என்னுமிந்த ஸ்ரீஸூக்தியை ஊன்றி நோக்க வேண்டா; மேலெழ நோக்கினாலுங்கூட நிஸ்ஸம்சயவிபர்யயமாகத் தெரியவருமது என்னவென்றால், பெருமாள் இளையபெருமாளைத் தம்முடன் காட்டுக்கு வரவேண்டாவென்றும் ஊரிலேயே நில்லுமென்றும் சொல்லுவதானது ஏதோ பரீக்ஷார்த்தமாகச் சொல்லுமதேயொழிய ஸஹ்ருதயமாகச் சொல்லுமதன்று; தம்மையும் பிராட்டியையும் உடன்கூட்டிக்கொண்டு போக வேணுமென்பதே பெருமாளுடைய அந்தரங்கம்—என்று இளையபெருமாள் நன்கறியுமவர்; ஆனதுபற்றியே அவர் நிற்கவில்லை என்பதாம். ஆக இளைய பெருமாளும் பெருமாளுகந்தபடியேதான் நடந்து கொண்டார். ஆனாலும் பெருமாளுடைய திருவாக்கிலிருந்து வ்யக்தமாக வெளிவந்த சொல்லின்படி நடந்து கொள்ளவில்லை யென்பதையிட்டும், சேஷத்வத்திற்காட்டிலும் பாரதந்த்ரியம் மிகச்சீரியது என்பதைக் காட்ட வேண்டியும், அநுஜ்ஞாகைங்கரியத்திற்காட்டிலும் ஆஜ்ஞா கைங்கர்யத்தின் அதிசயத்தை நிரூபிக்க வேண்டியும் இளைய பெருமாளுக்கு ஒருகுறை கூறியேயுள்ளார்கள். அதை அபலபிப்பார் ஆருமிலர்.

### இளையபெருமாளுக்குக் குறைகூறுவதன் மருமம்

15. இதுதன்னை விவேக குசலர்கள் எங்ஙனே கொள்ளவேணுமென்னில்; பட்டர் கைசிகமாஹாத்மியத்தில் வராஹப்பெருமாளுக்குப் பெருமை சொல்ல வேண்டி மத்ஸ்யகூர்மாதிகளான மற்றையவதாரங்களுக்கெல்லாம் ஒவ்வொரு குறை கூறியிருப்பதுபோலவே கொள்ளவேணும். கூறியுள்ள அக்குறைகளெல்லாம் பெரும்பாலும் சிலேடையில் அமைந்தனவேயல்லது வேறில்லையே

"ராமாவதாரம் கபிகளோடேகூடிப் புண்யஜநபாதாபர்யந்தமாயிருக்கு" மென்கிருர். இதனுல் இராமபிரானிடத்தில் வஸ்துஸ்திதியில் என்னகுறை தேறும்? ஒன்றும் தேருது. இதுபோலவே இளையபெருமாளுக்கும் வஸ்துஸ்திதியில் ஒருகுறையும் தேருது. அவர் எந்த தர்மத்தை யநுஷ்டிக்க வந்தாரோ அந்த தர்மத்தை யநுஷ்டித்தார் என்னுமித்தனையேயுள்ளது. ஒரே வஸ்துவுக்கு ஒரு த்ருஷ்டியாலே ஏற்றமும் மற்ருெரு த்ருஷ்டியாலே தாழ்வும் எங்குமுள்ளது. மண்ணுளாரைக் காட்டிலும் விண்ணுளார் சீரியர் என்பது ஸர்வஸம்ப்ரதிபந்நமாயிருக்கச் செய்தேயும், அந்தச் சீரியர்க்குத் தாழ்வாம்படி *விண்ணுளாரிலுஞ் சீரியரே* என்கிற பாசுரம் திருவவதரித்துள்ளது திருவிருத்தத்தில். சொன்னபடி கேட்டவரென்கிற பெருமை பரதாழ்வானுக்கிருந்தாலும் நியதமுமத்தாணிச் சேவகம் செய்தவரென்னும் பெருமையில்லையே. சொன்னபடி கேட்டதும் *சேஷ்யே புரஸ்தாத் சாலாயாம் யாவந்மே ந ப்ரஸீததி* இத்யாதிகளாலே ப்ராயோபவேசம் பண்ணுகிறேனென்பது முதலான ஆக்ரஹோக்திகளை ஆந்தனையும் சொல்லிப்பார்த்து, பெருமாள் சிறிதும் இடங்கொடாமையினுலே தலைவிதியே யென்று புறப்பட்டுப்போக இசைந்தமைதானேயுள்ளது. இறையும் அகலாதே திருமேனிக் காவலாயிருந்த பெருமை இளையபெருமாளுக்கன்ருே அஸாதாரணம்.

### உண்மையில் இளையோன்மீது ஒருபழிப்புமேருதென்பது

16. ஒருப்ரபுவுக்குப் பலவகையான காரியங்கள் ஆகவேண்டியவையுண்டு. தன்னுேடு கூடவேயிருந்து தொண்டுபுரியச் சிலர் வேண்டியிருக்கிறது. பிரிந்திருந்து நாட்டுக்கிரிசைகளை நிர்வஹிக்கச் சிலர் வேண்டியிருக்கிறது. எல்லாருமே தன் பக்கத்திலிருந்தாலும் சுவையில்லை; எல்லாருமே பிரிந்திருந்தாலும் நலமில்லை. தகுதிக்கேற்பத் தொண்டர்களைக் கூடியிருக்கவும் பிரிந்திருக்கவும் வ்யவஸ்தை செய்து வைப்பது ப்ரபுவின் பணி. திருவாழிதிருச்சங்குகளில் திருவாழியாழ்வான் *கருதுமிடம் பொருது—கைநின்றசக்கரத்தன்* என்கிறபடியே விடுத்ததிசைக்கருமந் திருத்தி வருவானுயுளன். திருச்சங்காழ்வான் *உண்பது சொல்லில்* என்கிற ஆண்டாள் பாசுரத்தின்படியே திருக்கைத்தலத்திலேயே ஸ்தாவரப்ரதிஷ்டையாகவுளன். இவை பகவத் ஸங்கல்பாதீநமான ஸ்திதிகள் என்பதில் என்ன ஸந்தேஹம். இதுபோலவே லக்ஷ்மணபரதர்களின் நிலைகளும் பெருமாளுடைய திருவுள்ளக்கருத்துக்கிணங்க அமைந்தனவேயென்பதை நம் ஆசாரியர்கள் காட்டியருளினபடி நாம் காட்டினுேமானுேம்.

### பூர்வாசார்ய ஸ்ரீஸூக்தி இவர்க்குச்சிறிதும் ஸாதகமன்றென்கை

17. விவாதஸ்வாமி திருப்பித்திருப்பி ஒன்றுதான் வினவுவர்-*கண்ணனூர் கண்ணபுரப் பாசுர வியாக்கியானத்தில் பெரியவாச்சான்பிள்ளை இளையபெருமாளுக்குக் குறைகூறி யிருக்கவில்லையா? என்று. ஏனில்லை? கூறியிருப்பதுண்டு; என்னகுறை கூறியுள்ளார்? அஸத்யவாதியென்கிற குறை கூறப்படவில்லை, நெஞ்சாலும் நினைக்கப்படவில்லை. "[அஹம் ஸர்வம் கரிஷ்யாமி] சொல்லிற்றெல்லாம் செய்யக்கடவேனென்று ப்ரதிஜ்ஞைபண்ணி, ராஜ்யத்திலேயிரீரென்ன, மாட்டேனென்று பின்போகை சேஷத்வக்ருத்யமோ?" எனகிற ஸ்ரீஸூக்திகளில் அந்தோ! இவர்க்கு என்ன ஸாதகமுள்ளது? "பின்போகை சேஷத்வக்ருத்யமோ" என்னுமல் "ஸத்யவாதிக்ருத்யமோ" என்றருளியிருந்தாராகில் அதை யெடுத்துக்காட்டி இவர் குணலமாடித் திரியலாம். பாரதந்த்ர்யபர்யவஸிதமான சேஷத்வத்திற்குப் போந்திலதென்பதை நாம் பல்காலுமெழுதியேயிருக்கிருேம். அபூர்வமாக இவர் என்ன காட்டிவிட்டார்? தம் மருளையே காட்டினர். மருளை மட்டுமன்று; இருள் துயக்கு மயக்குகளையும்.

## ஸத்யவாக்கின் தன்மையைத் தெளிவித்தல்

18. ஒருமாணுக்கன் உபாத்யாயரிடத்திலே பாடங்கேட்டு 'அடியேன் நாளைய பரீக்ஷையில் தவருது விடைகள் கூறுகிறேன்' என்று ப்ரதிஜ்ஞை பண்ணி வைத்து, தவருன விடைகளையே தந்தானென்ருல் 'மாணுக்கன் அஸத்யவாதி யாயினுன்' என்பாருண்டோ? உபாத்யாயர் ஒரு பதத்திற்கு அபார்த்தம் சொல்லிக்கொடுத்தாரென்ருல் அஸத்யவாதியாயினுரென்பாருண்டோ? எந்தத் தவறுதலை எந்த சப்தத்தாலே வ்யபதேசிக்கவேணுமென்கிற வ்யவஸ்தை யில்லையோ? களவு செய்தவனைப் பொய்யனென்பதும், பொய் சொன்னவனைக் கள்வனென்பதும் எங்கேனும் கண்டதுண்டோ? *அஹம் ஸர்வம் கரிஷ்யாமிக்கு முன்னே என்னவிருக்கிறதென்று காணவேண்டாவோ? *ஸஹ வைதேஹ்யா கிரிஸாநுஷு* என்றன்றோ வுள்ளது. 'சித்ரகூடத் தாழ்வரையிலே தேவரீரும் பிராட்டியாருமான சேர்த்தியிலே உடனிருந்து எல்லாம் செய்யக்கடவே னென்றல்லவோ கூறியிருப்பது. அதற்கு முரணுக நடந்துகொண்டமையுண்டாகில் காட்டலாமே. 'ஏகாதசி தவருமல் உபவாஸமிருப்பேன்' என்றவனைக்குறித்து 'இவன் ச்ரவணத்வாதசியன்று பாரணை செய்துவிட்டபடியாலே பொய்யனுயினன்' என்பாருண்டோ? ஒரு பிரபு "இங்கே பண்டிதர்களுக்குப் பரிசளிக்கப்படும்" என்று பிரகடனம் செய்திருந்ததில் 'பரிசளிக்கப்படும்' என்பதைமட்டும் பார்த்து விட்டு உள்ளே புகுந்தவொரு யதாஜாதன் பரிசுபெறமாட்டாதே நின்று ப்ரபுவை அஸத்யவாதியென்று பறைசாற்றிப் பழிப்பதுபோலவன்றோ இந்த ஸ்வாமியின் பழிப்புள்ளது. இவருடைய பழிப்புக்கு இங்கு அவகாசலேசமுமில்லையே.

## பெரியவாச்சான்பிள்ளையின் ஸ்ரீஸூக்திதத்துவம்

19. *கண்ணனூர் கண்ணபுரப் பாசுரவியாக்கியானத்தில் பெரியவாச்சான் பிள்ளை எவ்வகையான திருவுள்ளத்தாலே *அஹம் ஸர்வம் கரிஷ்யாமியை முன்னிட்டு இளையபெருமாளுக்குக் குறைகூறினுரென்பதை விசதமாகவுணர்த்துகிறோம் கேண்மின். *பவாம்ஸ்து ஸஹ வைதேஹ்யா கிரிஸாநுஷு ரம்ஸ்யதே* என்கிற பூர்வார்த்தத்தை அவ்வாசார்ய ஸார்வபௌமர் அறியாதவரல்லர். ஸர்வாத்மநா சேஷபூதனை லக்ஷ்மணன் *தனக்கேயாக எனைக்கொள்ளவேணுமென்றிருக்கை தவிர்ந்து இங்ஙனே வரையறுத்துக்கொள்வதுண்டோ? *அஹம் ஸர்வம் கரிஷ்யாமி யென்றவிடம் அழகிது; வைதேஹ்யா ஸஹைவ, கிரிஸாநுஷ்வேவ ஸர்வம் கரிஷ்யாமியென்று வரம்பிட்டுக்கொள்வது சேஷத்வத்திற்குச் சேருமோ? என்பதே பெரியவாச்சான் பிள்ளையின் திருவாக்குப்போக்கு. 'நெருப்பிலே புகச்சொன்னுராகில் அத்தையும் செய்யவேண்டாமோ?' என்றுள்ள அடுத்த ஸ்ரீஸூக்தியை நோக்குமிடத்து இங்ஙனேயாகும் விவரணமே பொருத்தமாகும். இவ்வர்த்தம் ஸ்தூலத்ருஷ்டியில் தோன்றவழியில்லை.

## பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியான ஸ்வாரஸ்ய நிரூபணம்

20. *ஆசசக்ஷே ஸத்பாவம் லக்ஷ்மணஸ்ய மஹாத்மந:, பரதாய அப்ரமேயாய குஹோ கஹநகோசர:* என்ற ச்லோகரத்நத்தைப் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானித் தருளியிருக்குமழகைச் சிறிது அநுபவிப்போமினி. இங்கு லக்ஷ்மணனுக்கு மஹாத்மாவென்கிற விசேஷணமும், பரதனுக்கு அப்ரமேயனென்கிற விசேஷணமும் வால்மீகி முனிவரால் கொடுக்கப்பட்டுள்ளன. இவற்றுள் மஹாத்மாவென்கிற பதத்திற்காட்டிலும் அப்ரமேய பதம் சீரியது. அப்ரமேய பதத்தின் ஸந்நிகர்ஷமில்லாத விடத்திலே மஹாத்ம பதம் சீர்மைபெற்றே விளங்கும். இங்கு அப்ரமேய பதஸந்நிகர்ஷபலத்தாலே மஹாத்ம பதத்திற்குச்

சிறிது மதிப்பு குறைந்தது. வ்யாக்க்யாந சக்ரவர்த்தியான பெரியவாச்சான் பிள்ளை இங்கு வியாக்கியானத்தில் ப்ரதீகமெடுக்கும்போது [லக்ஷ்மணஸ்ய மஹாத்மந:] என்றுமட்டும் ஒருவிசை ப்ரதீகமும், [லக்ஷ்மணஸ்ய மஹாத்மந: ஸத்பாவம் அப்ரமேயாய பரதாய ஆசசக்ஷே] என்று மற்றொருவிசை நீண்ட ப்ரதீகமுமெடுத்து அர்த்தவிசேஷ மருளிச்செய்கிறார். முந்துற (பரதாய அப்ரமேயாய) என்பதைக் காட்டாமல் [லக்ஷ்மணஸ்ய மஹாத்மந:] என்றுமட்டும் ப்ரதீகோபாதாநம் செய்தருளினபோது "கடலைக் கையாலே யிறைக்கத் தொடங்கினான்" என்பது வியாக்கியானம். இப்போது இளையபெருமாள் கடலாகவைக்கப்பட்டார். (மஹாத்மந:) என்றதற்குச் சேருமிது. உடனே [அப்ரமேயாய பரதாய] என்றதைச் சேர்த்து யோஜித்து வியாக்கியானிக்கும்போது மிகச்சீரிய அப்ரமேய பத விசேஷிதனான பரதாழ்வானுக்கு கௌரவாதிசயம் கொடுக்கவேண்டியிருந்ததனாலே "கழியின் பெருமையைக் கடலுக்குச் சொல்லத் தொடங்கினான்" என்று ஸ்ரீஸூக்தியிட்டு, கடலின் ஸ்தானத்திலே பரதாழ்வானை நிறுத்தி, கழியின் ஸ்தானத்திலே இளையபெருமாளை வைத்து ரஸகனமாக வியாக்கியானித்தார்.

### கடலும் கழியுமாக்கின ஸ்ரீஸூக்தி ரஸங்கள்

21. இந்த ச்லோகம் ஈட்டில் *துவளில் மாமணிமாடப்ரவேசத்திலும் வியாக்கியானிக்கப்பட்டிருந்தாலும் அங்கு "கடலைக் கையாலே யிறைக்கத் தொடங்கினான்" என்கிற பங்க்திமட்டுமேயுள்ளது. "கழியின் பெருமையைக் கடலுக்குச் சொல்லத்தொடங்கினான்" என்பதில்லை. ஆயினும் அது இன்சுவையே வடிவெடுத்த ஸ்ரீஸூக்தி காணீர். குஹப்பெருமாள் பரதாழ்வானைக் காணாமல் இளையபெருமாளைமட்டும் கண்டிருந்தபோது அவருடைய குணாதிசயங்களிலே மிகவுமீடுபட்டிருந்தார். இப்போது பரதாழ்வானை அணுகிக்கண்டவாறே

"வற்கலையினுடையானை மாசடைந்த மெய்யானை,
நற்கலையின்மதியென்ன நகையிழந்த முகத்தானைக்
கற்கனியக்கனிகின்ற துயரானைக் கண்ணுற்றான்,
விற்கையினின்றிடைவீழ விம்முற்று நின்றொழிந்தான்"

"தாயுரைகொண்டு தாதையுதவிய தரணிதன்னைத்
தீவினையென்னநீத்துச் சிந்தனை முகத்திற்றேக்கிப்
போயினையென்றபோழ்து புகழினோய் தன்மைகண்டால்
ஆயிரமிராமர்நின் கேழாவரோ தெரியினம்மா"

என்னும்படியான பெருமைகளை யுணரப்பெற்று 'இவன் அப்ரமேயன்' என்று கொண்டார். இதற்குச்சேர வியாக்கியானித்தருளும் பெரியவாச்சான்பிள்ளை [இரண்டாம் பர்யாயத்திலே] கடலின் ஸ்தானத்தை பரதாழ்வானுக்குக் கொடுத்துக் கழியின் ஸ்தானத்தை இளையபெருமாளுக்குத் தந்தார். விவாத ஸ்வாமி இந்த வைலக்ஷண்யத்தைக் குறிக்கொண்டிருந்தாராகில் [பரதாய மஹாத்மநே] என்று ப்ராமாதிகமாகவும் எழுத ப்ரஸக்தியிராது. லக்ஷ்மணனை மஹாத்மாவென்றும், பரதனை அப்ரமேயனென்றும் நிர்தேசித்த வால்மீகி முனிவரின் ஹ்ருதயத்தையும் இவர் அறிந்தவரல்லர்; இந்த நிர்தேசவைலக்ஷண்யத்தைக்கண்டே பெரியவாச்சான்பிள்ளை கழியுங் கடலுமாக வுரையிட்டருளினாரென்பதையு முணர்ந்தவரல்லர். பின்னை யென்னவுணர்ந்தார்? பேசுமின் கூசமின்றி. நுனிப்புல்மேயவுணர்ந்தார்.

### குஹப்பெருமாள் பரதாழ்வானிடமறிந்த பெருமை

22. பரதாழ்வானுக்குண்டான பெருமையெல்லாம் பாரதந்த்ரயநிஷ்டையினாலே. அது அவன் சித்ரகூடத்திலிருந்து பாதுகையைப்பெற்று மீளுகையில்

விளங்கிற்றேயல்லது முன்னம் விளங்கிற்றில்லை. *ராஜ்யஞ்சாஹஞ்ச ராமஸ்ய* என்றதும் *ஜகர்ஹே ச புரோஹிதம்* என்றதுமிருந்தாலும் அவை வெறுஞ் சொற்களேயன்றே. அனுஷ்டானங்கண்டது சித்திரகூடத்தில்தான். குஹன் பரதனைக் கண்ட காலத்தில் இந்தப் பெருமையையறிய ப்ரஸக்தியே கிடையாது. மரவுரி தரித்தலும் உடம்பு மாசுபடிந்திருத்தலும் முகம் ஒளி குறைந்து வாட்ட முற்றிருத்தலும் கல்லும் கரையும்படி பெருந்துயரத்துடனிருத்தலுமாகிய திருமேனி வைலக்ஷண்யத்தைமத்றுமே கண்டு ஈடுபட்டவர் குஹப்பெருமாள். அன்னவருடைய செய்தியைச் சொல்லவந்ததான *ஆசசக்ஷே ஸத்பாவம்* என்ற ச்லோகத்தை வியாக்கியானித் தருளுமிடத்து இளையபெருமாளை அஸத்யவாதியென்று ப்ரஸ்தாவிப்பதற்கே ப்ரஸக்தி கிடையாது. 'மஹாத்மந:' என்ற பதத்திற்காட்டிலும் மிகச்சீரியதான 'அப்ரமேயாய' என்ற பதத்தின் ஸ்வாரஸ்யத்தைக் காட்டுவதற்காகவே பெரியவாச்சான்பிள்ளை பரதனுக்கு ஏற்றமும் லக்ஷ்மணனுக்குத் தாழ்வும் காட்டினர். காட்டின தாழ்வும் அஸத்யவாதித்வரூபமன்று, அன்று, அன்று. ஸ்ரீஸூக்தியைக் கண்திறந்து காணவேணும்.

### 'லக்ஷ்மணஸ்ய மஹாத்மந:' என்பது மிகமிக நோக்கத்தக்கது

23. விவாதஸ்வாமி எந்த ச்லோகத்தின் வியாக்கியான பங்க்தியைத் தமக்கு ஸாதகமென்று அஸ்தாநே கலங்கிக் காட்டுகிறரோ, அந்த ச்லோகத்தில் லக்ஷ்மணன் மஹாத்மாவென்று விசேஷிதன் என்னுமிடத்தை நன்கு நோக்கவேணும். மஹாத்மாவென்று யாரைச் சொல்வது தெரியுமோ? பொய் சொல்லுபவனை மஹாத்மாவென்றால் சிரிப்பர்கள். *மநஸ்யந்யத் வசஸ்யந்யத் கர்மண்யந்யத் துராத்மநாம்; மநஸ்யேகம் வசஸ்யேகம் கர்மண்யேகம் மஹாத்மநாம்* என்கிற ஸுப்ரஸித்த வசனத்தையுமறியாதார் பேசுவது ஒருபேச்சோ? நெஞ்சிலுள்ளபடியே வாயாற் சொல்லுவதும், வாயாற் சொன்னபடியே செய்து தலைக்கட்டுவதுமான த்ரிகரணசுத்தியுள்ளவற்கேயாயிற்று மஹாத்மபத மேற்பது. இக்காலத்தில் லௌகிகமஹநீயர்கள் ஒரு வ்யக்திவிசேஷத்தை மஹாத்மபதத்தினால் விசேஷித்திருப்பது இவ்வதிசயங்கொண்டே யல்லவோ? இதை நாம் இங்குக் காட்டுவது ஏகதேச த்ருஷ்டாந்தமாகக் கொள்ளத்தக்கது. ஆக இவ்வளவாலும், விவாதவிஷயத்தில் இவரெடுத்துக்காட்டின பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்தி இவர்க்குப் பயன்படாதென்பது ஸ்தாபிக்கப்பட்டது.

### விவாதஸ்வாமியின் வினக்களுக்கு விடையிறுத்தல்

24. இனி, இவர் நம்மைக்குறித்துச் செய்திருக்கின்ற சில வினக்களுக்கு ருஜுவானவழியில் விடைதருகின்றோம். முன்னம் ஒன்று தெரிவிக்கிறோம்; எந்த விஷயத்திலும் நாம் ருஜுவான வழியை அணுமாத்ரமும் அதிலங்கியாமல் நெறியிலே போமவர்களாதலால் நம்மைநோக்கி யார் எத்தனை வினக்கள் கேட்டாலும் கேட்ட க்ஷணத்திலேயே நாம் விடையிறுக்கத் தடையிருப்பதில்லை. இவரும் இவர்க்குத் துணைவர்களும் ருஜுமார்க்கத்தில் செல்லகில்லாராதலால் இன்று நாம் ஒன்றுகேட்டால் மூன்று நான்கு ஆண்டுகள் கடந்தபின்னர் 'ஏதேனும் சொல்லித்தீரவேண்டி யிருக்கிறதே!' என்று பலபஜமான விடைகளைத் தந்து அடுத்தக்ஷணத்திலேயே தத்தளித்து நிற்கிறார்கள். இதன் விரிவுகளை த்ரௌபதீசரணாகதி விஷயமாக இவரெழுதியுள்ளவற்றை விமர்சிக்கும்போது வைத்துக்கொள்வோம். ப்ரக்ருதம் இவருடைய வினக்களுக்கு அடைவே விடை தருகின்றோம்.

இளையபெருமாள் அஸத்யவாதியா? என்னும் தலைப்பின்கீழ் நாமெழுதியுள்ள வியாஸத்தை இவர் ஐந்து பிரிவாகப் பிரித்து 1, 2, 3, 4, 5 என்று லக்க

மிட்டு எழுதிவருகையில் "இவ்வைந்து பிரிவுகளுள் முதல் பிரிவு கூறும்விஷயம் பெரியவாச்சான்பிள்ளை திருவுள்ளத்திற்கு முற்றிலும் முரண்பட்டதாம்" என்று தொடங்கி யெழுதின விஷயங்கள் தீயினில்தூசாயின வென்பதை நிரூபகர்கள் நன்குணர்ந்தார்கள். இந்த முதற் பிரிவில்—இராமபிரான் வனவாஸம் முடித்துத் திருவயோத்தி சேர்ந்து முடிசூடிக்கொள்ளும்போது இளையோனை இளவரசு முடி சூடிக்கொள்ளுமாறு கட்டளையிட்டனனே, அக்கட்டளையை லக்ஷ்மணன் பரிபாலனம் செய்தானா? இல்லையன்றோ. ஆகவே அவன் எப்படி ஸத்யவாதியாவன்? என்று கேட்கிறார் ஸ்வாமி. இது பாலிசனும் கேட்கத்தகாத கேள்வி என்று கூசாமல் சொல்லலாம். மகனுக்குப் பிதா உபநயநம் செய்யும்போது பல கட்டளைகள் இடுகிறார்; மகன் ஒவ்வொன்றுக்கும் 'அப்படியே, அப்படியே, அப்படியே' என்று கைகூப்பி நின்று இசைந்து கூறுகின்றான். 𑌬𑌾𑌢𑌮𑍍, 𑌬𑌾𑌢𑌮𑍍 என்று பாடம் படிக்கிறானென்பது யாவருமறிந்தது, இவருமறிந்தது. இவரும் அந்த பாடம் படித்தவரே. ஆனால் ஒரு கட்டளையைக்கூட நிறைவேற்றுவதில்லை யென்பது உலகமுழுதுமுணர்ந்தது. லௌகிகப் பிள்ளைகள் செய்வதில்லை யென்பது பற்றி நாம் சொல்லவில்லை. பரமவைதிகர்களாய் நூல்வரம்பு கடவாதே ஒழுகுபவர்களாயுள்ள பரமைகாந்திகளின் குடும்பங்களிலும் நடைபெறுவதில்லை. இதனால் அஸத்யவாதிகளாய்விட்டதாகப் பேச்சு எங்கும் நிகழ்வதில்லை. தாங்களே சொல்லிக்கொண்டபடி செய்யாத தொண்டர்களுமுள்ளார்கள்; பிரபு சொன்னபடி செய்யாத தொண்டர்களுமுள்ளார்கள். இவர்களுக்கு அஸத்யவாதிகளென்ற பட்டம் இவருடைய நிகண்டுவில் வழங்குமத்தனை.

## நம்மாழ்வார் திருவாக்கில் எத்தனை பொய்கள்?

25. பண்டிதர்கள் ப்ரவசனம் செய்வதற்காக ஸபைகளுக்கு அழைக்கப்படுகிறார்கள்; அவசியம் வருவதாகவும் இசைகிறார்கள். ஸமயத்தில் வரத்தவறுகிறார்கள். இதனால் அஸத்யவாதி பட்டம் அவர்களுக்கு விளையுமோ? கைங்கரியம் செய்யப்பாரித்து *ஒழிவில் காலமெல்லா முடனாய்மன்னி வழுவிலாவடிமை செய்யவேண்டு நாம்* என்ற நம்மாழ்வார் தாமே *யான் வேண்டும் மாடு—அடிக்கீழ்க் குற்றேவலன்று* என்று ஓரிடத்தில் பேசுகிறார். இதில் இரண்டத்தொன்று பொய்யாயிருக்கவேண்டும். *இனிப் பிறவி யான் வேண்டேன்* என்னுமவர் தாமே *அடியேன் வேண்டும் மாடு—பிறப்பின்மை பெறுகையன்று* என்றும் பேசி வைத்திருக்கின்றார். இரண்டத்தொன்று பொய்யாயிருக்கவேண்டும். *அவனடியாரடியே கூடவேணும்* என்னுமவர் தாமே *முற்றவுமுண்ட பிரான் தொண்டரோமாயுய்யலல்லால் இல்லை கண்டீர் துணையே* என்கிறார். இரண்டத்தொன்று பொய்யாயிருக்கவேண்டும். அருளிச்செயல்களிலிருந்து இங்ஙனே ஆயிரக்கணக்கான பொய்கள் எடுத்துக்காட்டவல்லோம். *பொய்யில் பாடலாயிரம்* என்றதற்கு—பொய்யில்லாத பாடலென்று பொருளன்று; பொய்யிலேயான பாடல் என்றுதான் பொருள்—என்று நிர்வஹிக்க வேணுமிவர். இவ்விஷயங்களிலே இவருடைய திருநாவீறும் திருக்கைவீறும் உலகறிய வெளிவரவேணும். அதனால் லோகோபகாரம் பெரிதுமுண்டு. நாம் ஆக்ஷேபித்ததாகவும், தத்பரிஹாரம் செய்வதாகவும் காட்டவேண்டா. உலக நன்மைக்காக இப்படிப்பட்ட ஆக்ஷேபங்களைத் தாமே உத்க்ஷேபித்துக்கொண்டு பரிஹாரம் வெளியிடுவது பாங்கல்லவா? *தெழிகுரலருவித் திருவேங்கடத்தெந்தைக்கு ஒழிவில் காலமெல்லாம் நாமடிமை செய்யவேண்டுமென்று கம்பீரமாகப் பாசுரம் பாடிவிட்டுத் திருவேங்கடமலையிருக்கிற திசையைக்கூட உற்றுநோக்காமலிருந்த ஆழ்வாரே அஸத்யவாதிகளில் தலைவர் என்று அடியேன் உறுதியாகவுரைக்கின்றேன். விவாத ஸ்வாமி இதற்கு நின்று விடைகூறட்டும். ஆழ்வார்க்கு

மநோரத மாத்திரத்தில்தான் அதிகாரமென்னில்; இளையபெருமாளுக்கு வாசிகவிஜ்ஞாபனத்தில் மட்டுமே அதிகாரமென்று ஏன் கொள்ளலாகாது? மநோரதமென்பது மாநஸிக வியாபாரம். அதை ஆழ்வார் திருவுள்ளத்தளவிலே அடக்கி வைத்துக்கொள்ளாமல் வாசநிகமாகவும் வெளியிட்டாயிற்று. இளைய பெருமாளோடு ஆழ்வாரோடு வாசியற்றதாயிற்று. அஸத்யவாதியென்கிற குற்றம் இளையாழ்வானுக்கும் நம்மாழ்வாருக்கும் துல்யம். அஸத்யவாதியென்று இளையோனுக்குக் கொடுக்க நினைக்கும் தண்டனையை ஆழ்வாருக்கும் கூசாது கொடுக்கவேண்டியதே. சிறிதும் ஆலோசனை செய்யவேண்டா.

### ஆழ்வாருடைய பொய்களே அதிகம்

26. இன்னமும் நன்கு ஆழ்ந்து ஆராய்ந்து பார்க்கில் லக்ஷ்மணனிற்காட்டிலும் ஆழ்வார் பக்கலிலேயே அஸத்யவாதித்வபாபம் அதிசயித்திருக்கும். எங்ஙனேயென்னில்; நில் என்ன நிற்காததும், இளவரசு முடிசூடு என்ன மாட்டேனென்றதுமாகிய இரண்டு அஸத்யங்களே லக்ஷ்மணன்பால் நிரூபிக்கப்பட்டன. ஆழ்வார் திறத்தில் இரண்டன்றே, இரண்டாயிரமல்லவா அஸத்யங்கள். *தனியன் பிறப்பிலிதன்னை* என்று எம்பெருமானைப் பிறப்பில்லாதவனுகத் தாமே சொல்லிவைத்து *எந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தாய்* என்றது அஸத்யமல்லவா? *தாமரை நின் கண்பாதம் கையொவ்வா* என்று சொல்லி வைத்து *கண்ணைககால் தூய செய்யமலர்களா* என்றது அஸத்யமல்லவா? *எம்மா வீட்டுத்திறமும் செப்பம்* என்று சொல்லிவைத்து *மாக வைகுந்தம் காண்பதற்கென் மனம் ஏகமெண்ணுமிராப்பகல்* என்றது அஸத்யமல்லவா? யசோதைப்பிராட்டி கண்ணனை நோக்கி *பொய்யாவுன்னைப் புறம்பல பேசுவ புத்தகத்துக்குள கேட்டேன்* என்று 'உன்னுடைய பொய்கள் பாரத பாகவதாதி புஸ்தகராசிகளிலேறிக்கிடக்கிறதய்யா!' என்றாள். ஆழ்வாருடைய பொய்களும் அதற்குமேலன்றோ.

### லக்ஷ்மணனை அஸத்யவாதியென்றால் அபசாரமே

27. ஸ்வாமிந்! நின்று விடைதந்தாகவேணும். 'இளையபெருமாளை அஸத்யவாதியென்பது அபசாரமான வார்த்தை' என்று நானெழுதியிருந்ததற்குப் பரிஹாரம் கூறுவதாகப் பீடிகையிட்டு நஹிநிந்தாந்யாயத்தை விவரித்திருக்கிறது. இதன் பொருள் யார்க்கும் தெரியாதுபோல அபூர்வ விவரணம் செய்தருளியிருக்கிறது. "நஹிநிந்தாந்யாயமும் இங்குச் சொல்ல இடமில்லை" என்று ஏற்கெனவே நானெழுதியிருப்பதை யநுவதித்து ஏனிடமில்லையென்று உறுமியிருக்கிறது. சிறிதுமிடமில்லை யென்பதைத் திருவுள்ளத்தில் நன்குபடும்படி நிரூபிக்கிறேன், கேட்டருள்க. சாஸ்த்ரீயமான நஹிநிந்தாந்யாயத்தை எப்போது நானேயெடுத்துக் காட்டியிருக்கிறேனோ, அப்போது சாஸ்த்ரங்களில் நிந்தையுண்டென்பதையும் அது குற்றமன்றென்பதையும் நான் நன்கறிந்துளேனென்பது வ்யக்தமாயிற்று. அப்படியிருக்க, 'லக்ஷ்மணனை அஸத்யவாதியென்பது அபசாரம்' என்று நானெழுதியிருந்தால் அதற்கு நஹிநிந்தாந்யாயத்தை விவரணம் செய்துகாட்டுவது விடையாய்விடுமோ? ஒருநாளுமாகாது. ஒருவனை ஸ்துதிப்பதற்காக மற்றொருவனை நிந்தை செய்யலாமென்றால் வாய்வந்தபடி எதையுஞ்சொல்லி நிந்திக்கலாமென்று அர்த்தமோ? பெரியாழ்வாரை ஸ்துதிப்பதற்காக நம்மாழ்வாரை நிந்திக்கலாம். தொண்டரடிப்பொடியாழ்வாரை ஸ்துதிப்பதற்காகத் திருப்பாணாழ்வாரை நிந்திக்கலாம். எப்படி நிந்திக்கலாமென்றால், ப்ரமாணத்தைக்கொண்டோ யுக்தியைக்கொண்டோ அவிசால்யமானதொரு குறையைக்காட்டி நிந்திக்கலாம். அந்த ரீதியிலே லக்ஷ்மணனுக்குக் குறைகூற

வேணுமானல் 'இவன் அசித்வத் பாரதந்திரிய பரிமளமில்லாதவன்' என்று சொல்லிக் குறை கூறலாம். இதுதான் ஆசாரியர்களும் காட்டியிருக்கிற குறை. இதைச் சொன்னல் அபசாரமாகாது. ஏலாத குறையைக் கூறினல் அபசாரமே. அஸத்யவாதித்வமென்பது இளையபெருமாளிடத்தில் ஆயிரமாண்டு போராடினலும் ஏலாது, ஏலாது, ஏலாது. இந்த சர்விதசர்வணமும் பிஷ்டபேஷணமும் போதுமே போதுமே. இனி இந்த பிஷ்டபேஷணத்திற்கு அவகாசம் கொடார்.

### ஸ்வாராதத்வ துராராதத்வங்கள்

28. கண்ணிநுண் சிறுத்தாம்பு வியாக்கியானத்தில் ஈச்வரன் துராராதனென்றும், ஆசார்யன் ஸ்வாராதனென்றும் அருளிச்செய்யப்பட்டிருக்கிறதாம். இதைக்கொண்டு அதிப்ரஸங்கம் ப்ராப்தமாகலாமோவென்று கேட்கிருர். விடை தருகேன் கெண்மின். தேவதாந்தரங்களையபேக்ஷித்து எம்பெருமான் ஸ்வாராதன்; ஆசார்யர்களை யபேக்ஷித்து துராராதன். இதில் என்ன அநுபபத்தி. எம்பெருமானை எளியன் என்பவர்கள் அவனை அரியன் என்றும் சொல்லவில்லையோ? ஒருவ்யக்தியினிடத்திலேயே பித்ருத்வமும் புத்ரத்வமும் ஒன்றுகூடியிருக்கவில்லையோ? ரங்காசாரியர் ராகவாசாரியருக்குப் புத்திரராயும் ராமாநுஜாசாரியருக்குப் பிதாவாயுமில்லையோ? அஸம்பாவிதமாக என்ன வந்திட்டது. சமத்காரோக்திகளைக்கொண்டு சோத்யம் செய்வதும் தீது. லக்ஷ்மணனைப் பொய்யனென்றதும் சமத்காரோக்தியே யென்ருல், அதை ஒரே பேச்சில் முடிக்கலாமே. இத்தனை ஸம்ப்ரமம் ஏதுக்கு? இத்தனையும் இரவியைக்கண்ட இருளாயன்றே ஒழிந்தது.

### ஏற்றத்தாழ்வுகளின் விநோதமான நிரூபணம்

29. ஒருபெரிய அதிசயம் கேளீர். நம்மாழ்வாருடைய மநோரதம் அபரிமிதம் என்றும், இளையபெருமாளுடைய மநோரதம் மிகவும் பரிமிதமென்றும் காட்டி இதனல் இளையோனுக்கு ஒரு குறைகாட்ட வருகிருர் ஸ்வாமி. நம்பெருமாள் ஸன்னிதியில் நடந்தவொரு கதை நினைவுக்கு வருகிறது. அங்கு ஒருவர் ஒரு மஹாதனிகரிடம் சென்று கருடமண்டபத்தின்மீது எனக்கு ஐயாயிரம் ரூ. கடன்தர வேணுமென்று அபேக்ஷித்தாராம். மற்ருெருவர் அவரிடமே வந்து எனக்கு ஆயிரக்கால் மண்டபத்தின்மீது ஐம்பதினயிரம் ரூ. கடன் தருகவென்று விரும்பினராம். யாருக்குக் கடன் கிடைத்ததென்பதிருக்கட்டும். இவ்விருவருள் யார் உயர்ந்தவர்? என்று சர்ச்சித்து, ஐயாயிரம் ரூ. அபேக்ஷித்தவர் பரிமிதமாக விரும்பினவராகையாலே தாழ்ந்தவர்; ஐம்பதினயிரமபேக்ஷித்தவர் அபரிமிதமாக விரும்பினவராகையாலே மிக மேம்பட்டவர் என்று நிர்ணயித்தார்களாம். இவருடைய நிர்ணயமும் அதற்குத் தோள்தீண்டியே. நம்மாழ்வார்க்கு எவ்வளவு பெருமை சொன்னலும் நமக்குப் பரமஸந்தோஷமே. இதில் நாம் போராட வருகின்றிலோம். நம்மாழ்வாரைக் காட்டிலும் இளையபெருமாள் மிகத் தாழ்ந்தவரென்ருலும் நமக்கு மிகமகிழ்ச்சியே. அசாஸ்த்ரீயமும் அஸங்கதமுமான வாதம் தலைகாட்டினல் அதனைத் தலைமடியச் செய்வது தவிரோம்.

### ஆசார்யஹ்ருதய ஸூக்திரஸவிசேஷம்

30. ஆசார்யஹ்ருதயத்தில் "உண்ணுதுகிடந்தோர் மாயையினலென்னும்" இத்யாதி சூர்ணை தொடங்கிப் பல சூர்ணைகளாலே ஆழ்வார்க்கு திவ்யமஹிஷிகளோடும் லக்ஷ்மணபரதசத்ருக்நதசரதாதிகளோடும் யசோதாப்ரஹ்லாத விபீஷணமாருதி பார்த்தர்களோடும் ஸாம்யத்தை நிர்வஹித்தருளி, உடனே "குழலில் நெஞ்சும் அருகலில் சுவையுமானவிவர் அவர்களளவல்லர்" என்னு

மொரு சூர்ணையினுல் அவர்களனைவரையும் கீழே தள்ளியிட்டார். பரமசதுரர்களான ஆசார்ய ஸார்வபௌமர்கள் தாங்கள் நிரூபிக்கும் ஏற்றத்தாழ்வுகளுக்கு அற்புதமான பொருத்தங்களைக் காட்டுவார்கள். லக்ஷ்மணன் அஸத்யவாதியென்றிட்டுத் தாழ்வை நிரூபித்தவிடம் கண்டதில்லை, கேட்டதில்லை.

### நமது வார்த்தையின் பொருளறியாமை

*31.* "ப்ரபு நியமித்தபடி நடந்து கொள்ளவில்லையென்ருல் அது வேறு குற்றம்; ஸேவகன் தான் சொன்னபடி நடந்துகொள்ளாமற்போனுல் அப்போது அவன் பொய்யன் என்கிற குற்றத்திற்கு ஆளாவன்" என்று நாமெழுதியிருப்பதாக வெடுத்துக்காட்டி, இதன்படி லக்ஷ்மணன் பொய்யனென்று தேறிவிடவில்லையா? என்று கேட்கிருர். ஒருகாலும் தேருது. "ஸேவகன் தான் சொன்னபடி நடந்துகொள்ளாமற் போனுல்" என்றதன் பொருளையறிந்திலரந்தோ! ஒரு ஸேவகன் தான் ஒரு காரியம் செய்துதலைக்கட்டினதாக பிரபுவிடம் சொன்னுன்; விசாரித்ததில் அங்ஙனே செய்தது கிடையாதென்று தெரியவந்தது. அப்போது அவனுக்குப் பொய்யனென்ற பெயர் பரவிற்று. இதையன்ருே நாமெழுதியிருப்பது. லக்ஷ்மண விஷயத்தில் இங்ஙனே நிரூபிக்கத்தக்கதுண்டாகில் ஸ்வாமிந்! நின்று நிரூபித்தருள்க.

### அடியேனுடைய வாதங்களின் யதார்த்த ஸ்வரூபம்

*32.* விவாதஸ்வாமி இதனிடையில் ஒன்று எழுதுகிருர்—"உறங்குகிறவரையுணர்த்தலாம்; உணர்ந்தே உறங்குகிறவர் போன்று கிடப்பாரை உணர்த்த இயலுமோ? இயலாதன்ருே?" என்று. இங்ஙனே யெழுதினவருடைய தாற்பரியமென்னவென்ருல், நாம் விஷய தத்துவங்களை நெஞ்சார வுணர்ந்தேயிருந்தும் ஏதோ வீணுன பிடிவாதங்கொண்டு அஸ்தாநேவாதம் செய்கிருேமென்று இவர் நினைத்து இங்ஙனே எழுதியுள்ளார். இது சில பாமரர்களை மயக்கக்கூடியதாக இருக்கலாம். உண்மை கேண்மின். அடியேன் சர்ச்சிக்கும் எந்த விஷயமும் லோகோபகாரத்தில் பர்யவஸிக்குமதேயொழிய, அப்ராமாணிகமான விஷயத்தை வீணுன அபிநிவேசத்தினுலோ ஆக்ரஹத்தினுலோ எழுதிப்போருகிருேமென்பது லவலேசமும் கிடையாது. நாம் இதுகாறும் எழுதியுள்ளவையெல்லாம் மத்யஸ்தர்களான மஹநீயர்களின் விமர்சத்திற்கு இலக்கானவையேயொழிய நமது ஒரு நூலும் கானனசந்த்ரிகையாக இருந்ததில்லை. சென்னையிலும் மற்றும் பலபல மஹாநகரங்களிலும் ப்ரதிஷ்டிதர்களாக விளங்கும் வைதிகலௌகிகப்பெரியார்கள் நமது நூல்களைப்பற்றி யெழுதுகையில் "இவை மிகவும் ஆவச்யகங்கள்; அநவத்யங்கள்; இருள்தருமா ஞாலத்திற்கு இரவி போன்றவை; என்றெழுதி வெளியிட்டிருப்பதையும் வெளியிட்டுக்கொண்டே யிருப்பதையும், அடுத்தபடியாக வெளியிடப்போவதையும் உலகம் காண்கிறது. கிம்பஹுநா? இவர்தாமே ப்ரசம்ஸித்து எழுதிவெளியிட்டுள்ளது போதாதோ? "அப்போது எனக்கு பங்கமொன்றும் விளையாமையாலே ப்ரசம்ஸித்தேன்; இனி ப்ரசம்ஸிப்பேனே? ஜாகரூகனுயிருக்கமாட்டேனே?" என்பர். இஃது உண்மையே.

### இளையபெருமாளின் பெருமதிப்பு

*33.* மேலே நாம் உதாஹரித்த வாக்யத்தை இவர் எந்த ஸந்தர்ப்பத்தில் எழுதியுள்ளாரென்ருல் "இளையபெருமாள் எல்லாவடிமைகளையும் செய்தார்; ஆழ்வார் புளியமரத்தடியில்தானெழுந்தருளியிருந்தவர்; ஆழ்வாரிலும் லக்ஷ்மணனுக்கே சிறப்பு உண்டு" என்று நாம் எழுதியிருந்ததை யநுவதித்து மறுப்புரைக்கும் ஸந்தர்ப்பத்திலே யெழுதியுள்ளார். இங்கு இவர் எழுதும் மறுப்பு

என்னவென்றல் "ஆழ்வார் வாசிக கைங்கரியம் செய்யவில்லையா? அக்கைங்கரியத்தை எல்லாவடிமையாகவும் எம்பெருமான் திருவுள்ளம் பற்றவில்லையா?" என்பதே. இதற்குச் சொல்லுகிறேம். *கோவைவாயாள் பொருட்டு* என்கிற திருவாய்மொழியை அர்த்தம் தெரியாமல் பாசுரங்களை மட்டும் அநுஸந்திக்கும்போதே *உரோமகூபங்களாய்க் கண்ணநீர்கள் துள்ளஞ்சோரத் துயிலணைகொள்ளேன்* என்னும் நிலைமையை யெய்திவருபவனடியேன். *பக்திப்ரபாவபவதத்புதபாவபந்த ஸந்துக்ஷிதப்ரணயஸாரரஸௌகபூர்ண:* என்னுமாழ்வான் ஸ்ரீஸூக்திக்கு நமது விபுலோபந்யாஸத்தைக் கேட்பவர்களும் காண்பவர்களும் அந்த நிலைமையை யெய்தி வருகின்றூர்கள். அன்னவர்களில் இவரும் அந்யதமரே. இளையபெருமாள் செய்த கைங்கரியத்தைக்கண்டு உகந்தபெருமாள் *பாவஜ்ஞேந க்ருதஜ்ஞேந* என்றூரம்பித்து *ந ஸம்வ்ருத்த: பிதா மம* என்று சொல்லியிருப்பதை யுணராமல் இவர் லக்ஷ்மணனிடத்தில் குறை கூறினது அபசாரமன்றே, மஹாபசாரமன்றே. "தம்பீ! சக்ரவர்த்தி துஞ்சினுரென்று நினைத்திருந்தேன்! அவர் துஞ்சினுரல்லர்" என்கிறூர் பெருமாள். 'ந ஸம்வ்ருத்த: பிதா மம' என்றதன் பொருள் இதுவே. பெரியதிருமொழியில் (1—2—6) வியாக்கியானம் ஸேவிப்பது. ஈட்டில் (5—4—8) வியாக்கியானமும் ஸேவிப்பது. பெரியதிருமொழி வியாக்கியானம் பெரியவாச்சான்பிள்ளையுடையதாகையாலே அவர் அங்கு *அஹம் ஸர்வம் கரிஷ்யாமியை யெடுத்து அர்த்தம் செய்தருளியிருக்குமழகைக் காண்பரேல் இவர் இதில் மிக்க தெளிவு பெறுவரென்பது திண்ணம். இளையபெருமாள் ஸர்வமும் செய்தவரென்கிறூரங்கு.

### இந்த விசாரம் நமது நான்கு பத்ரிகைகளில் உண்டென்பது

34. "இளையபெருமாள் அஸத்யவாதியா?" என்னும் தலைப்பின்கீழ் நாமெழுதிய வியாஸம் அம்ருதலஹரியிலும் ஸ்ரீராமாநுஜனிலுமே இவர் கண்டதாகத் தெரிவிக்கப்பட்டிருக்கிறது; நமது மாதாந்தப்பத்ரிகைகள் நான்கிலும் இஃது உள்ளது. கீழே ப்ரஸ்தாவித்த இருபத்ரிகைகள் தவிர, "ஸ்ரீராமாநுஜ பத்ரிக' என்கிற தெலுங்குபாஷைப்பத்திரிகையிலும் (நெ. 104ல்), வைதிக மநோஹரா' என்கிற ஸம்ஸ்க்ருதபாஷைப்பத்ரிகையிலும் (நெ. 103ல்) இது காணத்தக்கது. தெலுங்குபத்ரிகை ஏற்கெனவே வெளிவந்து விட்டது. ஸம்ஸ்க்ருதபத்ரிகை (103) அடுத்தவாரத்தில் வெளிவருகின்றது. ஆக, இந்த விசாரம் பரவாத இடமில்லை. பாரதவர்ஷே பரதகண்டே முழுதும் பரவியுள்ளது.

### முடிவில் ஒரு மகிழ்ச்சிப் பேச்சு

32. நம்முடைய வொருவாக்யத்தில் "இளையபெருமாள் தவறியிருந்தான், ........அவனை" என்று உள்ளதாம். எழுவாய் லக்ஷ்மணனென்றிருந்தால் மேலே ஏகவசந நிர்தேசமிருக்கலாமென்றும், இளையபெருமாளென்பது பன்மைப் பொருளதான எழுவாயாகையாலே மேலே பஹுவசநநிர்தேசமேயிருக்கவேணுமென்றும் சிக்ஷிக்கிறூர். இவ்வகையான அவத்யம் நமது வாக்ஸரணியில்நேராது. இத்தகைய சிக்ஷைகளை நமது நூல்களிலிருந்தே தெரிந்துகொண்டவரிவர். இதில் ஐயமில்லை. இங்கு நமது ப்ரமாதமோ, அச்சின் ப்ரமாதமோ அறியோம். இதையெடுத்துக்காட்டினது பற்றி நமக்கு அந்தரங்க ஸாக்ஷிகமான ஆனந்தமே.

சிங்கப்பெருமாள் திருவாக்குவெற்றியில் முதல்மலர் முற்றிற்று.

---

ஸ்ரீ:

சிங்கப்பெருமாள்திருவாக்குவெற்றி—இரண்டாவதுமலர்

# 2. கருத்துவிளக்கும்முறையின் முறைகேடு

### இவ்வாராய்ச்சிக்கு மூலம் இன்னதென்று நிரூபித்தல்

*1.* விவாத ஸ்வாமியின் ஆராய்ச்சித்திரளில் இரண்டாமாராய்ச்சியாகக் காண்பது கருத்து விளக்கும் முறையென்னும் மகுடம் புனைந்ததோர் விஷயம். இதன் ப்ரமேயத்தைச் சுருங்கத் தெரிவித்து, பிறகு இதன் விமர்சத்திலிறங்குவோம். ஸ்ரீராமாநுஜன் 118ல் கூரத்தாழ்வானிதிஹாஸதத்துவம் என்னும் பெரியதொரு வியாஸத்தை வெளியிட்ட நாம் அதன் முடிவில் 'ஸமயவிசேஷத்தில் ப்ராப்தம்' என மகுடமிட்டு, சென்னைப் பத்ரிகைகளில் ஒன்றாகிய புநர்வஸுவென்னும் பத்ரிகையின் (1—4) இதழில் 'இராமாயணமும் பரமாத்மாவும்' என்கிற வொரு வியாஸம் விவாத ஸ்வாமியால் எழுதப்பட்டிருப்பதை இரண்டு பக்கம் பூர்த்தியாக வெளியிட்டு விட்டு, அதில் பெரியதொரு குறையையும் நிரூபித்திருந்தோம் (அதாவது) ஸ்ரீராமாயண யுத்தகாண்டத்தில் *தமஸ: பரமோ தாதா* இத்யாதி வசனங்களை [மண்டோதரியின் வார்த்தையானவற்றை] யெடுத்துக்காட்டி, இவை மந்தோதரிக்கும் ஸ்ரீராமபிரானுக்கும் ஸம்பாஷணையாகத் தோன்றியனபோல் விவாத ஸ்வாமியால் விவரிக்கப்பட்டிருந்தது. அந்த ச்லோகங்களெல்லாம் ப்ரேதனை இராவணனை முன்னிலையாக்கிச் சொன்னவையேயொழிய இராமனை நோக்கிக் கூறியவையல்ல என்பது நிர்விவாதம். இப்படியிருக்க விவாத வியாஸத்தில் மந்தோதரிக்கும் பெருமாளுக்கும் ஸம்பாஷணையாக வைத்து விவரணம் காட்டியிருப்பது அஸமஞ்ஜஸம். இவர்களுக்குப் பரஸ்பரம் முகாவலோகனமே கிடையாது. இத்யாதிகளைப்பரக்க எழுதியிருந்தோம் அதைப்பற்றின விசாரமிது.

### நமது ப்ரக்ருதவ்யாஸத்தை மறுக்க இடமே கிடையாதென்று நிரூபித்தல்

2. நமது வியாஸத்தின்முடிவில் ஒருசிறந்த வார்த்தையும் எழுதியிருந்தோம். (அதாவது)

> "ஆனால் ஒன்று சொல்லக்கூடும்; மண்டோதரி இராமனை நோக்கிச் சொல்லவில்லையென்பதை நாம் நன்கு அறிவோம்; ஆனாலும் இப்படி ஸம்வாதமாகவைத்து உரைப்பது ஓர் அழகு என்று தோன்றிச் செய்ததத்தனை—என்று. தத்துவத்தை உணர்த்தி நிற்பதே நமது கர்த்தவ்யமாதலால் *ஓம் சாந்திச் சாந்திச் சாந்தி:* என்று நிற்கிறோம்"

என்பது நமது வியாஸத்தின் முடிவு. விவாதஸ்வாமி இதன்மேல் வாய்திறக்க இடமேகிடையாது. மந்தோதரிக்கும் பெருமாளுக்கும் நேருக்குநேராக ஸம்பாஷணை நடந்ததுண்டு என்று ஸமர்த்திக்க சக்தியிருந்தால் இதைப்பற்றி யெழுதுவதில் ஸம்ப்ரமிக்கவேணும். அஃது இல்லையாகில் வாளாவிருக்கவேணுமத்தனை. ஏதோ பிரபலமான ஸமாதானம் தெரிவிப்பவர்போன்று ஸ்ரீமத்கம்பீரமாக "கருத்து விளக்கும்முறை" என மகுடமிட்டுச் சிறிதும் அர்த்தமில்லாதபடி காடு பாய்ந்து எழுதியுள்ளார்விவாதஸ்வாமி. ப்ரதிபதார்த்த விவரணரூபமாகத் தாம் எழுதவில்லையென்றும், கருத்தை விளங்கச்செய்ய விரித்துக்கூறினதேயுள்ளதென்றும், அந்த ஸரணியில் ராமமந்தோதரிகளுக்கு ஸம்பாஷணையாக வைத்து விவரித்ததில் பொருத்தமின்மை இல்லையென்றுமெழுதி, இதற்குச் சில சான்றுகளைக் காட்டுவோமென்று தொடங்கி *தம் த்ருஷ்ட்வா சத்ருஹந்தாரம்* என்ற ஸ்ரீராமாயண ச்லோகத்திற்கும் *தூமணிமாடத்து* என்கிற திருப்பாவைப் பாசுரத்திற்கும் அமைந்துள்ள பூருவர்களின் வியாக்கியான பங்க்திகளையெடுத்தெழுதிப் பலபக்கங்களை நிரப்பியுள்ளார். விவாதவிஷயத்திற்கும் இவரெடுத்

துக் காட்டியுள்ள விடங்களுக்கும் ஸம்பந்தகந்தமாவது உண்டோவென்று காணக் கண்ணுடையார் இல்லாமற் போகவில்லையே.

## ஸ்ரீமத் குன்றபாக்கம் ஸ்வாமி ஸாதித்த அத்புத கதையொன்று

3. கீர்த்திமூர்த்தியான வித்வத்ஸிம்ஹம். ஸ்ரீமத் குன்றபாக்கம் ஸ்வாமி திருவல்லிக்கேணி வேதவேதாந்த வர்த்திநீஸபையில் பரீக்ஷகராக எழுந்தருள்வர்; ஸ்ரீபாஷ்யத்தில் சில பூர்வபக்ஷங்களையிட்டு ப்ரச்நபத்ரிகை கொடுத்தருளின போது அதற்கு ஸமாதானம் எழுதுகிறவொரு பண்டிதவித்யார்த்தி இருபது பக்கங்களுக்குமேல் எழுதிக்கொடுத்தாராம்; அவற்றில் என்ன விஷயமென்றால்—

ஸ்ரீபாஷ்யமென்பது உயர்ந்த க்ரந்தம். இது ஸம்ஸ்க்ருத பாஷையில் அவதரித்தது. இதையருளிச்செய்த ஸ்ரீராமாநுஜர் ஸ்ரீபெரும்பூதூரிலவதரித்தவர். ஸ்ரீபெரும்பூதூர் செங்கற்பட்டு ஜில்லாவைச் சேர்ந்தது. வண்டலூரி லிறங்கிப்போகலாம், திருவள்ளூரிலுமிறங்கிப்போகலாம். ராமாநுஜர் செய்தருளின க்ரந்தங்களுக்குள் ஸ்ரீபாஷ்யமே மிகவும் பெரிது. இது வெகு கம்பீரமானது. இதற்கு அவதரித்திருக்கிற வியாக்கியானங்கள் இதைவிட கம்பீரமானவை. இது ப்ரஹ்மஸூத்ரங்களுக்கு வியாக்கியானமாகத் தோன்றியது. இதில் அநேக அதிகரணங்களுண்டு. ஒவ்வோரதிகரணத்திலும் பூர்வபக்ஷமென்றும் ஸித்தாந்தமென்றும் வைப்பதுண்டு. இதில் லகு பூர்வபக்ஷமென்பது ஸாதாரணமாயிருக்கும். மஹாபூர்வபக்ஷமென்பது மிகவும் கடிநமாயிருக்கும். சங்கரபாஷ்யாதிகளிலுங்கூட இப்படி பூர்வபக்ஷ ஸித்தாந்த விந்யாஸங்கள் காண்பதுண்டு. ஆனாலும் ஸ்ரீபாஷ்யத்தில் ஸ்வாமி காட்டியிருக்கும் பூர்வபக்ஷங்களும் ஸித்தாந்தங்களும் வெகு அற்புதமானவை. பூர்வபக்ஷங்களை வெளியிட்ட ஸ்ரீபாஷ்யகாரரே ஸித்தாந்தங்களையும் வெகு லலிதமாக ஸாதித்திருப்பதால் நமக்கு ஓரிடத்திலும் ச்ரமமே கிடையாது. க்ரந்தாக்ஷர ஸ்ரீபாஷ்யத்தில் அச்சுப்பிழைகள் விசேஷமாகவுண்டென்கிறார்கள். தேவநாகரிதெலுங்குஸ்ரீகோசங்களில்பிழைகிடையாது.

இவ்வண்ணமாகவே எழுதி நிறைத்திருந்தாராம். இருபது பக்கங்களுக்குமேல் எழுதியாகவேண்டு மென்பதொன்றே அந்த வித்யார்த்தி தான் வைத்துக் கொண்ட நிர்ப்பந்தமாம். மிக விபுலமாக எழுதிவைத்தால் வாசித்துப்பார்க்கச் சோம்பலினால் ஏடுகளைமட்டும் கணக்கிட்டுப் பரீக்ஷகர் பஹுமானித்தருள்வர் என்பதும் அவருடைய துணிபாம். இதை ஸ்ரீமத் ஸ்வாமி அடிக்கடி ஸாதிப்பதும் சிரிப்பதுமாயிருப்பர். இந்த இதிஹாஸமே பிரகிருதம் நினைவுக்கு வருகிறது.

## தம் த்ருஷ்ட்வாச்லோக வியாக்கியானத்தில் இவர் காட்டுவதின்னதென்னுதல்

4. *தம் த்ருஷ்ட்வா சத்ருஹந்தாரம்* என்கிற ச்லோகவியாக்கியானத்தில் விவாத ஸ்வாமிக்கு ஸாதகமாக ஓரக்ஷரமாவது உண்டா என்பதை இனி விமர்சிப்போம். இந்த ச்லோகமானது ஸ்ரீராமனுடையதோ ஸீதையினுடையதோ அல்ல; வால்மீகி முனிவர் ஸொந்தமாக எழுதிய ச்லோகமென்பதையும், *தமஸ: பரமோ தாதா* இத்யாதி ப்ரக்ருத விசாராஸ்பத ச்லோகங்கள் ஸாக்ஷாத் மந்தோதரியினுடையவையே என்பதும் முன்னம் குறிக்கொள்ளத்தக்கது. அது நிற்க. இங்கு நியாயவேதாந்த வித்வான் முந்துறமுன்னம் எடுத்துக்காட்டும் பெரிய விஷயமென்னவென்றால், த்ருஷ்ட்வா என்கிற வடசொல்லுக்கு கண்டு என்பது பொருளே தவிர கண்டாள் என்பது பொருளல்லவாம். த்ருஷ்ட்வா என்பது அவ்யயமேயொழிய க்ரியாபதமல்லவே. ஆதலால் அதற்கு கண்டாள் என்கிற பொருள் அஸம்பாவிதமாயிருக்க, நம்பிள்ளை "எதிரிகளைவென்ற வீரக்கோலத்தோடே கண்டாள்" என்று வினைமுற்றாகவைத்துப் பொருளெழுதிவிட்டாராம். அந்தோ! ஈதென்ன எழுத்து! தலையெழுத்தேயிது. இது மஹாபூர்வபக்ஷமல்லவா?

### இவர்க்குத் துணைவரான மற்றொருவரின் மஹாபூர்வபக்ஷம்

5. பரத சத்ருக்நர்களையழைத்து வருவதற்காகக் கேகயநாட்டிற்குத் தூதர்கள் புறப்பட்டுப்போனபோக்கைச் சொல்லாநின்ற வான்மீகி முனிவர் "வழியிடையில் தாமரைத் தடாகங்களையும் நிர்மலநதிகளையும் பார்த்துக்கொண்டே போனார்களவர்கள்" என்று பொருள்பட நின்ற ச்லோகத்தை யெழுதிவைத்தார். அங்கு வியாக்கியானித்தருளா நின்ற நம்பிள்ளை "பாராதே போனார்களென்கை" என்று பொருளருளிச் செய்துள்ளார் ஈட்டில். இதைப்பற்றி விரிவான வியாஸமொன்றை ஸ்ரீராமாநுஜன் 110ல் நாம்வெளியிட்டிருப்பதை இவரும் சிந்தனைசெய்திருக்கிறாரே; அதையெடுத்துக்காட்டி இவர் வெற்றி பெறலாமே. *நிரீக்ஷமாணா: ஜக்மு:* என்று மூலத்தில் நிஸ்ஸந்தேஹமாக இருக்க, பார்த்துக்கொண்டே போனார்களென்று இதற்குப் பொருளெழுத வேண்டியிருக்க, பாராதே போனார்களென்று எழுதியது அஸாதுவென்று மதாந்தரஸ்தர்கள் கருதியிருப்பதுண்டு; அப்படியே இவரும், த்ருஷ்ட்வா' என்பதற்கு கண்டு என்று பொருளெழுத வேண்டியிருக்க 'கண்டாள்' என்றெழுதியது அவ்யுத்பத்தி நிபந்தநமென்று தாராளமாக எழுதிவைக்கலாமே. நம் ஆசாரியர்களின் வியாக்கியானங்கள் பெரும்பாலும் இப்புடைகளிலே அமைந்தவை. பதத்தின்மேல் பொருளுரைப்பதென்பது ஏகதேசம். மந்தோதரிக்கும் இராமபிரானுக்கும் ஸம்பாஷணை நடந்ததாக இவர் கலங்கி மருண்டு மயங்கி யெழுதினதற்கு த்ருஷ்டாந்தமாகக்கூடிய வாக்ஸந்நிவேசம் நம்மாசாரியர்களின் ஸ்ரீஸூக்திரத்நாகரத்தில் வர்ஷஸஹஸ்ரம் தேடினாலும் கிடைக்கமாட்டாதுகிடீர். இவர் நமக்கு விடைகூறவேண்டிய வழியை நமது வியாஸத்தின் முடிவில் நாமே காட்டியிருந்தும், மற்றதையெல்லாம் அநுவதித்துக் காட்டியவிவர் அதைமட்டும் காட்டாதுமறைத்திட்டனர். இது ஆர்ஜவமின்மை. "மந்தோதரிக்கும் பெருமாளுக்கும் ஸம்பாஷணை நடந்ததில்லைதான்; ஆனாலும் அழகாக விவரிக்கவேணுமென்றுகருதி நாம் அழகாக எழுதிவைத்திருப்பதை அவரவர்கள் அழகாகப் பார்க்கவேணுமேயொழிய வேறாகப் பார்த்தால் அழகன்று" என்று இவ்வளவே இவர் எழுதிவைத்தால் எவ்வளவோ அழகாயிருக்குமே. அதை அழகாக அவலம்பிக்கத் தெரியவில்லையே.

### பட்டர் வியாக்கியானத்தில் இவர்காட்டுவதும் பயனற்றதென்னல்

6. பட்டருடைய *மைவண்ணநறுங்குஞ்சி வியாக்கியானத்தில் *தம் த்ருஷ்ட்வா* என்கிற ப்ரக்ருதச்லோகமே ரஸகனமாக வியாக்கியானிக்கப்பட்டுள்ளது. அங்கு வைதேஹீ என்கிற பதத்திற்கும், பர்த்தாரம் என்கிற பதத்திற்கும் விசேஷார்த்தமருளிச் செய்யாநின்ற பட்டர் ஸீதாபிராட்டியின் திருவுள்ளத்தில் தோன்றியிருந்த எண்ணத்தைக் கண்டுபிடித்து மிக நுட்பமானவழியில் வியாக்கியானம் செய்தருளியுள்ளார். இதை ஸாமான்யபுத்திகள் கண்டால் ரஸிக்கவும் மாட்டார்கள்; 'இது அநந்விதமான பங்க்தி' என்றுமெண்ணிப் போவர்கள். 'தலைகாலில்லாத வாக்யார்த்தமிது' என்று சிலர் விபரீதமாகப் பேசுவர்கள். சொல்லின் நரம்பறிந்து ஆழ்ந்து வியாக்கியானம் செய்தருளும் நம் ஆசாரியர்களுக்கே நிலமான இந்த ஸரணி மற்றையோர்களுக்குப் புரியாதென்பதில் வியப்பில்லை. இந்த ஸரணியானது, இவர் சிரமப்பட்டுத் தேடியெடுத்துக்காட்டும் *தம் த்ருஷ்ட்வா ச்லோகத்தில் மட்டுமன்று; நம் ஆசாரியர்களின் வியாக்கியானத்திற்கு இலக்கான ச்லோகங்களில்—பாசுரங்களில் பெரும்பாலும் காணலாகும். இதன் மருமத்தைப்பற்றி இருபத்தைந்து ஸம்வத்ஸரங்களுக்குமுன்பு "நம்பிள்ளை ஸூக்திச் சுவையமுதம்" என்னும் தலைப்பில் நீண்டதோர் வியாஸமெழுதி வெளியிட்டிருக்கிறேன். அஃது இப்போது

ஒரு பிரதிகூட கிடைப்பதில்லை. விரைவில் மறுபதிப்பு செய்யலாகும். அது நிற்க. ப்ரக்ருதமான பட்டர் வியாக்கியானத்தில், *பபூவ ஹ்ருஷ்டா ஸீதா ஸா ராகவம் பரிஷஸ்வஜே* என்றும் ச்லோகரசனை செய்யலாமாயிருக்க, அங்ஙனம் செய்யாதே பிராட்டிக்கு வாசகமாக வைதேஹீ என்கிற பதத்தையும், பெருமாளுக்கு வாசகமாக பர்த்தாரம் என்கிற பதத்தையும் பிரயோகித்த வான்மீகி முனிவருடைய உள்ளத்துள் உறைந்திருந்த உயர்ந்த பொருள்கள் பல எடுத்துக்காட்டப்பட்டுள்ளன. அவற்றுள் ஒரு பொருளைமட்டும் இவர் எடுத்துக்காட்டி இது எப்படி க்ரியாபதத்தோடு அந்வயிக்குமென்று க்ஷேபிக்கிறார். இந்த வியாஜத்தில் அந்த அர்த்த விசேஷங்களையெல்லாம் எடுத்துக்காட்டியிருந்தாராகில், தமது சுஷ்கவாக்ஜால ப்ரபஞ்சத்தில் ரஸிகர்களுக்குப் பெரியதொரு விருந்திட்டவராவர். "காணலாம், காண்போம், கண்டோமல்லவா? கண்டுவிட்டோம்; தக்க ஸமாதானங்களைக் கண்டோமல்லவா?" என்று இங்ஙனே ஒரு ஆசார்யரும் பயிலாத அசட்டு வார்த்தைகளைப் பேசிப் போதைப்போக்கவும், எழுதிப் பத்ர பூரணம் செய்யவுமே பாக்கியம் பெற்றவிவர் தமது அசட்டு வார்த்தைகளுக்கு சிக்ஷணம்பெற்றால் பெருநன்றி பாராட்டவேண்டியது கடமையாயிருந்தும், அது செய்யாததோடு மேன்மேலும் அசட்டு வார்த்தைகளையே உலகறிய நிரப்பி "அவரோடு எதிரம்பு கோப்பவரிலே நான் தலைவன், தாதாவின் ஸ்ரீஸூக்தியை பங்கமடைவிக்க முயல்பவர்களில் நான் முன்னிற்பவன்" என்று பிரசாரம் செய்துபோருவது சோசநீயம், அத்யந்த சோசநீயம், அதிதராம் சோசநீயம்.

### பட்டரருளிய அர்த்தவிசேஷங்களின் நிரூபணம்

ப்ரக்ருமநுஸராம:, பாயஸம் பக்ஷயாம:. ப்ரஸ்துதமான பட்டர் வியாக்கியானத்தில் வைதேஹீ என்பதற்கு அருளிய அர்த்த விசேஷங்கள் இவை;—

"[வைதேஹீ] 1. ஐயர் வயிற்றிலே பிறந்திலேனாகில் நமக்கு இந்தப் பேறில்லையிறே. [வைதேஹீ] 2. இக்குடியில் பிறந்திலேனாகில் பெருமாள் என்னைக் கைப்பிடியாரே. [வைதேஹீ] 3. இந்நிலத்தில் பிறந்திலேனாகில் எனக்கு இவ்வில்லோட்டை ஸௌப்ராத்ரம் கிடையாதே. இவ்வில்லோட்டை ஸௌப்ராத்ரம் இல்லையாகில் வீர்யசுல்கமான இவ்வாகாரம் கூடாதே. [வைதேஹீ] 4. தநுர்ப்பங்கமாத்திரத்திலே என்னையும் தம்முடைய வம்சத்தையும் பெருமாளுக்கு அடிமையாக எழுதிக்கொடுத்த ஐயர் இற்றை நாளை ஆகாரங்கண்டால் என்படுகிறாரோ? [வைதேஹீ] 5. *பும்ஸாம் த்ருஷ்டிசித்தாபஹாரிணம்* என்கிறபடியே ஸர்வலோகாகர்ஷகமான இந்நிலையை ஐயரையொழிய நான் காண்பதே! என்று பித்ருஸ்ம்ருதி பண்ணுகிறாள்."

ஆக இவ்வைந்து விசேஷார்த்தங்கள் அங்கு பட்டர் அருளியவை. இந்த வாக்யங்களெல்லாம் பரிஷஸ்வஜே என்கிற க்ரியாபதத்தோடு எங்ஙனே பொருந்தும்? என்பது இவருடைய க்ஷேபம். பொருந்துமாவென்பதை நடுநிலையில் நிற்பவர்கள் காணவேணுமென்று ப்ரார்த்தித்துமிருக்கிறார். இவ்வுபக்ஷேபத்தின் பர்யவஸாநமென்னவென்று பார்க்கவேணுமே; இப்படி அநந்விதமாகவோ விருத்தமாகவோ எழுதுகிறமுறை பூர்வாசார்ய ஸ்ரீஸூக்திகளிலே காண்பதாலும், கருத்து விளக்கும் முறையிலே இவை ஒருவாறு ஸங்கதமாகலாமாகையாலும், இவ்வண்ணமாகவே ஸ்ரீராமனுக்கும் மந்தோதரிக்கும் ஸம்பாஷணையாகவைத்து நானெழுதியது விருத்தமானாலும் ஸங்கதமாகக்குறையில்லை—என்பதில் பர்யவஸாநம்.

### ஸமந்வயமும் அநந்வயமும்

**7.** மேலே யெடுத்துக்காட்டின பட்டர் ஸ்ரீஸூக்திகள் பிராட்டியின் திருவுள்ளத்திலோடின எண்ணங்களை வைதேஹீ என்கிற நிர்தேச ஸ்வாரஸ்யங்கொண்டு

கண்டறிந்து பேசினவையாதலால் "இப்படியிப்படி நினைத்தவளான பிராட்டி ஆரத்தழுவினுள்" என்றுஎளிதாக ஸமந்வயம். இங்ஙனே ஆயிரக்கணக்கானவிடங்களில் ஸமந்வயம் ஸுகரம். ப்ரேதனை ராவணனை நோக்கிச்சொன்ன மந்தோதரி வார்த்தைகளை இராமபிரானை நோக்கிச் சொன்னவையாக வைத்து இவர் தீட்டின வியாஸம் ஸர்வாத்மநா அநந்விதமே. "இந்த அஸம்பத்த வார்த்தைகளை எப்படி ஒட்டவைக்கலாம்?" என்று ஒருபெரியவரைக் கேட்டேன்? "என்ன ப்ரமாதம்? கூழ்தடவி ஒட்டவைக்க முடியாததுமுண்டோ? ஸ்ரீவசநபூஷணத்தில் *இருவரையும் திருத்துவது உபதேசத்தாலே; உபதேசத்தாலே மீளாதபோது சேதநனை அருளாலே திருத்தும்; ஈச்வரனை அழகாலே திருத்தும்* என்று ஸாதிக்கப்பட்டிருக்கிறதன்றோ. ஒருவழியில் காரியமாகாவிட்டால் மற்றொரு வழியில் காரியம் பார்ப்பதென்பது எங்குமுண்டன்றோ; சாஸ்த்ரார்த்தம் காட்டி ஒட்டவைக்க முடியாமற்போனால் கூழ்தடவியும் ஒட்டவைக்க முடியாமற் போகுமோ?" என்றார் அப்பெரியார். அதற்கு அருகேயிருந்த மற்றொரு பெரியவர் கூறினார்—"ஒட்டவைப்பதற்கு அதுவொரு ஸாதனமுண்டுதான்; இத்தகைய விஷயங்களில் அந்தக் கூழ்கூட ஒட்டமாட்டேனென்னுமே" என்று. இப்பெரியாரிருவரும் இன்னாரென்பது க்ரமேண வெளிவரும். இவர்க்கும்ஆப்தர்களே.

## தூமணிமாடத்து வியாக்கியானமும் துணைபுரியாதென்பது

8. விவாதவித்வான் "இன்னமும் ஓரிடத்தைக் காண்போம்" என்று தொடங்கி *தூமணிமாடத்து வியாக்கியானத்தில்—உள்ளே கிடக்கும் [மாமான் மகளான] கோபிக்கும் வெளியிலுள்ள கோபிகளுக்கும் ஸம்வாதமாக வைத்து அருளிச்செய்துள்ள பங்க்திகளையும், மாமிக்கும் கோபிகளுக்கும் ஸம்பாஷணையாக வைத்தபங்க்திகளையும் எடுத்துக்காட்டி "........கூற இயலுமோ?" என்றும், "நடுநிலைமையில் நின்று காண்க" என்றும் எழுதியுள்ளார். வெறும் நடுநிலைமையில் நின்று காணவேண்டா; நட்டநடு நிலைமையில் நின்று காணுங்கோள். *நாங்கை நன்னடுவுள்* என்ற திருமங்கையாழ்வாரருளிச் செயலின்படி நன்னடுவுள் நின்று காணுங்கோள். அங்கு அஸம்பாவிதமாக என்ன அருளிச் செய்யப்பட்டிருக்கிறது? *மாமான்மகளே!* *மாமீர்* என்ற விளிகளுக்குப் பொருந்தாதபடி ஏதேனும் ஸம்வாதம் வைக்கப்பட்டிருக்கிறதோ? தூமணி மாடப்பாசுரத்தைத் தேடிப்பிடிக்க வேணுமோ? ஸம்வாதரசனைகளைப் பெரும்பாலும் பாட்டுத்தோறும் காணலாமே. 'மந்தோதரீ வார்த்தைகளில் உண்மையில் இல்லாத ஸம்வாதத்தை வைத்து விவரித்தது பிசகு' என்று நாம் எழுதியிருப்பதாக மருண்டன்றோ இவர் இப்படியெல்லாம் உதாஹரிப்பது. நமது நூல்களையெல்லாம் இவர் அல்லும்பகலும் சிந்தனைசெய்து கண்டபாடமும் செய்திருக்கிறாரே, அவற்றில் எத்தனையோ ஸம்வாத கல்பனைகள் செய்திருக்கிறோமே; அவற்றையே யெடுத்துக்காட்டி நம்வாயை எளிதாக மூடுவிக்கலாமே. நாம் இவருடைய வியாஸத்தில் எடுத்துக் காட்டியிருப்பது அஸம்பாவிதமான ஸம்வாத கல்பனையை; இவரெடுத்துக் காட்டுவது ஸுதராம் ஸம்பாவிதமானதை. இதையும் விவேகிகள் நடுநிலையில் நின்று பார்க்க. இவர் செய்த மந்தோதரீவாக்ய விவரணத்திலுள்ள அநுபபத்தியை நாம் வெட்டவெளிச்சமாகக்காட்டியுள்ளோம்; அது இவருள்ளத்திலும் நன்குபதிந்து இசையப்பெற்றுமிருக்கிறது. இதுபோல, பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்தியில் இதற்கு ஸமசீலமாக இவர்காட்டும் அநுபபத்தி ஒருவருடைய நெஞ்சிலாவது படிகின்றதா? என்று ஒவ்வொருவரையும் கேட்கிறோம். "நடுநிலையில் நின்று காண்க; மத்யஸ்தர்களாயிருந்து பார்க்க" என்றெழுதி விட்டால் எதைக்காண்பது?

எதைப்பார்ப்பது. இவருடைய அசட்டுப்பங்க்திகளையே திருப்பித்திருப்பிக் காணவேணும்; அடுத்தடுத்துப் பார்க்கவேணும். வேறு எதைப்பார்க்க முடியும்?

### திருக்கண்ணபுரம் ஸ்வாமி திருவாக்கொன்று

9. கீர்த்திமூர்த்தியான திருக்கண்ணபுரம் பட்டப்பாஸ்வாமி ஸாதிக்கும் கதைகளில் இதுவொன்று ;—ஒருவர் சொல்லுவராம் "ஆண்டாள் ஏதாவது ஒரு நிலையில் நின்று பாசுரம் பாடுகிறளா? நீங்களே பாருங்கள்; நந்தகோபன் குமரன் என்கிருள்; பின்னையும் பாற்கடலுள்பையத் துயின்றபரமனென்கிருள்; அதற்குமேலே ஓங்கியுலகளந்த வுத்தமனென்கிருள்; உடனே வடமதுரை மைந்தனென்கிருள்; நீங்களே பாருங்கள்—ஒன்றுக்கொன்று ஏதாவது ஸம்பந்த முண்டா; நன்ருகப் பாருங்கள். திருப்பாவை யிருக்கட்டும்; நாச்சியார் திரு மொழிக்குப்போனலோ இன்னமும் விபரீதம். தையொருதிங்களும் என்று சொல்லி வாய்மூடுவதற்கு முன்னே மாசிமுன்னுளென்கிருள்; பின்னையும் பங்குனிநாள் கடைபாரித்தோமென்கிருள். தையும் மாசியும் பங்குனியும் அடுத்தடுத்து வந்துவிடுமா? இடையில் முப்பதுநாள் கழியவேண்டாமா? மார்கழித்திங்களென்று சொல்லி முப்பதுநாள் கடந்த பிறகுதானே தையொரு திங்களென்ருள். தை என்று வாயால் சொன்னவுடனே மாசியும் பங்குனியும் எப்படியையா வந்துவிடும்? நம்மாழ்வார் பாட்டை யெடுத்துக்கொண்டாலோ கேட்கவே வேண்டாம்; உயர்வற என்கிருர், உடனே மயர்வற என்கிருர்; உடனே அயர்வற என்கிருர், மேலே துயரற என்கிருர்; இப்படிச் சொல்லி விட்டால் என்ன அர்த்தம்? உயரெங்கே மயரெங்கே? அயரெங்கே துயரெங்கே? என்னமோ வாயில் வந்தபடி பேசுகிருர்கள். திருமங்கையாழ்வாருமிப்படித்தான். வாடினேனென்கிருர், கூடினேனென்கிருர், ஓடினேனென்கிருர், நாடினேனென் கிருர். வாடினல் கூடமுடியுமா? கூடினல் ஓடமுடியுமா? ஓடினல் நாடமுடி யுமா?........" என்றிப்படி அபரிமிதமான விரோதோத்பாவனங்கள் செய்து கொண்டிருப்பராம். பட்டப்பாஸ்வாமி தாமும் ஒன்றும் சொல்லமுடியாமல் திகைத்து நிற்பராம். விவாதஸ்வாமி பட்டர் வியாக்கியானத்திலும் பெரிய வாச்சான்பிள்ளை வியாக்கியானத்திலும் ஏதோ பொருத்தமின்மையிருப்பதாக நினைத்து பாருங்கள் காணுங்கள் என்றெழுதுகிருரன்ருே, இவருடைய வாக்குப் போக்கும் அத்தகைத்தே.அதில் ஹாஸ்யரஸமாவது உணடு; இதில்அதுவுமில்லை.

### தம் வாக்கியத்தினலேயே தமக்குப் பங்கம்

10. தாம் இவ்வாராய்ச்சி வெளியிடுதற்குக் காரணத்தைத் தாமே காட்டுவ தாக முன்வந்து காட்டுகிருரிவர்—"இராமபிரானல் கொலையுண்டு கிடக்கும் இராவணனைக் கண்டு நெஞ்சழிந்து புலம்பிப்பேசும் மண்டோதரி ஒருவாறு தெளிந்து அந்த இராமபிரானுடைய மேன்மையைப் பின்வருமாறு பேசியிருக் கிருள்—இராமபிரானே! இனியறிந்தே னெம்பெருமானுன்னை யென்ருள். அதைத் திருச்செவியேற்ற இராமபிரான் என்னை நீயறிந்தவாறு எங்ஙனே? என்ருன். அதற்கு மண்டோதரி........ சொன்னுள். அதன்மேல் சக்ரவர்த்தித் திருமகன் திரும்பவும்........ வினவினன். மண்டோதரி அதற்கு........ என்ருள்" இத்யாதி. இந்த அஸம்பத்த பங்க்திகளைக் கூச்சமின்றி மீண்டு மீண்டும் எடுத்துக்காட்டத் தோன்றுகிறதே! இதுதான் ஆச்சரியம். இதற்குமேல் எழுதுகிருர்—ஸ்ரீராமாநுஜன் பத்ரிகை 118ல் ஆக்ஷேபம் செய்திருப்பவர்களை ........என வினவுகின்ருேம். முறையோடு விடைபகர முடியுமானல் முன்வருக" என்று. புதுக்கோட்டை ஸம்ஸ்தானத்தில் வாக்யார்த்தம் சொல்ல வித்வான் கள் கூடினர்கள்; ஒருவர் முகத்தையொருவர் பார்த்துக்கொண்டிருக்க, தலைவு

ரானவொரு பண்டிதர் 'யூயம் வக்தவ்யம்' என்றாராம்; அதுகேட்டு அனைவரும் விலவறச் சிரித்தார்களாம். அப்போது அந்த பண்டிதர் 'என்னய்யா சிரிப்பு? யூயம்—நீங்கள்; வக்தவ்யம்—சொல்லவேணும்; யூயம் வக்தவ்யம்—நீங்கள் சொல்லவேணும். இதில் இன்னது பிழையென்று பகரமுடியுமானால் முன்வருக. வெறுமனே சிரித்து விட்டால் என்ன அர்த்தம்? விடையளிக்க எழுங்கள் பார்ப்போம்? என்று உறுமினாராம். அனைவரும் அஞ்சிநடுங்கி வாய்மூடி நின்றார்களாம். ப்ரக்ருதம், நமக்கும் அதுவே கதிதான். எங்ஙனே முன் வருவோம்? வெற்றி இவரதே.

### விவாதஸ்வாமியின் மிக அற்புதமான திருவாக்கு ஒன்று

11. "மண்டோதரி இராமபிரானே! என்று விளித்து ஒன்று சொன்னதாகவும், அதைத் திருச்செவியேற்ற இராமபிரான் ஒன்று கேட்டதாகவும், அதற்கு மண்டோதரி ஒருபதில் சொன்னதாகவும் அதற்குமேல் பெருமாள் ஒன்று கேட்டதாகவும் இப்படி நாம் எழுதியிருக்கிறோமேயொழிய, இவ்வாறு மண்டோதரிக்கும் இராமபிரானுக்கும் ஸல்லாபம் நடந்ததாக எழுதியிருக்கவேயில்லை; இது இங்கு முக்கியமாய் நோக்கத்தக்கது." என்கிறார் நியாயவேதாந்த வித்வான்ஸ்வாமி. வாஸ்தவமாக முக்கியமாய் நோக்கத்தக்கதேயிது. இருவர்க்கும் ஸம்பாஷணையை அமைத்திருக்கிறாரேயொழிய, ஸல்லாபம் நடந்ததாகக் கூறவில்லைதான். ஆகவே இதில் அவத்யம் சொல்லுவதற்கு இடமில்லையென்பதைக் கண்டோமல்லவா? கண்டோம், நன்கு கண்டோம். கண்டோம் கண்டோம் கண்டோம் கண்ணுக்கினியன கண்டோம். நிற்கலாமல்லவா, நிற்கலாம். நிற்போம். மேல்விஷயத்திற்குப் போகலாமல்லவா? போகலாம்; போவோம்.

சிங்கப்பெருமாள் திருவாக்குவெற்றி இரண்டாம்மலர் முற்றிற்று.

---

சிங்கப்பெருமாள்திருவாக்குவெற்றி—மூன்றாவதுமலர்

## 3. பரீக்ஷண நிரீக்ஷண கடாக்ஷணம்

1. ஸ்ரீராமாநுஜன் 120ல் புநர்வஸு பரீக்ஷணமென்றொரு வியாஸம் வெளியிட்டிருந்தோம். ஸ்ரீவசநபூஷண வியாக்கியானத்தில் "கட்டிலே வைத்தபோதோடு காட்டிலேவிட்டபோதோடு வாசியற" இத்யாதிஸ்ரீஸூக்தியை இவர்ரஸாபாஸப்படுத்தினது பற்றிய விசாரம். அது புநர்வஸுவென்னும் பத்ரிகையில் வெளிவந்ததனால் புநர்வஸுபரீக்ஷணம் என்று நமது வியாஸத்திற்குப் பெயரிடப்பட்டது. நாம் பரீக்ஷித்ததை இவர் நிரீக்ஷித்தார். இவர் நிரீக்ஷித்ததை நாம் கடாக்ஷிக்கிறோமிப்போது. மணவாளமாமுனிகள் கட்டிலே என்று அருளிச் செய்திருந்ததை இவர் கட்டிலிலேயென்பதாக மருண்டு விட்டார். இவர்தாம் சிலர்க்குச் செய்த தத்ப்ரவசநத்திலும் கட்டிலிலேயென்று திருத்திக் கொள்ளுங்களென்று கட்டளையிட்டதாகவும் சிலர் நமக்குச் சொன்னதனாலேயே இதைப் பற்றி யெழுதாவிடில் விபரீதமாகுமென்று எண்ணி நாமெழுதினோம். இப்போது இதில் இவருடைய விடையென்னவென்றால், மணவாளமாமுனிகளின் ஸ்ரீஸூக்தி (கட்டிலே) என்பதுதான்; கட்டிலிலே என்றில்லை. நான் எழுதியது (கட்டிலிலே) என்றுதான்; இதில் அச்சுப்பிழை கிடையாது—என்றெழுதியுள்ளார். உண்மை இதுவாகில் இதை இரண்டு மூன்று வரிகளில் எழுதி நிற்கலாம். இவரோ ஸரியாய் 4 பக்கமெழுதியிருக்கிறார். அத்தனை விரிவுக்கு என்ன விஷயமென்று ஒவ்வொருவரும் பார்க்கலாம். வழிதிகைத்து அலமருகின்றமை நன்கு தெரிகின்றதே

### ரஹஸ்யத்ரயஸாரப்ரவசந கதாவிசேஷம்

2. ஒருவர் ரஹஸ்யத்ரயஸாரப்ரவசநம் செய்து வந்தார். அதில் மூலமந்த்ராதிகாரமென்பது ஒன்று. அதற்கு முன்னதிகாரத்தின் ப்ரவசனம் முடிந்தபோது "நாளைக்கு மலமூத்ராதிகாரம் ஆரம்பமாகும்" என்று சொல்லிக் காலக்ஷேபத்தை நிறுத்தினார் ப்ரவசநகர்த்தா. இங்கு விஷயமென்னவென்றால் அச்சில் அக்ஷரமாருட்டம் ஏற்பட்டிருந்தது ; (மூலமந்த்ர) என்பதில் மூ ஸ்தானத்தில் ம என்றும், ம ஸ்தானத்தில் மூ என்றும் அச்சுடைப்பு புரண்டு போயிருந்தது. அதனால் (மலமூத்ராதிகார:) என்று இவர் வாசிக்க நேர்ந்தது. ஸ்வாமி தேசிகன் இங்கு ஏதோ ஆஹ்நிகம் ஸாதிக்கிறார் போலுமென்று நினைத்து ஆசார்யர் மலமூத்ராதிகாரமென்றே வ்யவஹரித்து விட்டார். சிஷ்யர்கள் வெளியிலே போய் ஹாஸிக்கவும் பரிஹாஸிக்கவும் ஆரம்பித்தார்கள். அது ஆசாரியர் காதில் எட்டினவாறே தாம் மருண்டதை உள்ளபடி தெரிந்து கொண்டார். ஆனாலும் மருண்டேனென்று சொல்ல முடியாதன்றோ. ஆலோசித்து ஒரு வழியாகச் சொல்ல நிச்சயித்து சிஷ்யர்களை வரவழைத்து 'நாளைக்கு நான் காலக்ஷேபத்திற்கு முன்னே மலமூத்ராதிகாரம் முடித்துக்கொண்டு ப்ரவசநமாரம்பிப்பதாகச் சொன்னேனே தவிர, தேசிகன் மலமூத்ராதிகாரம் ஸாதித்திருக்கிறாரென்று சொன்னதுண்டா? ஏனிப்படி வீணாகப் பழி சொல்லிப் பரிஹாஸிக்கிறீர்கள்? என்றாராம். அங்கு மேலே நடந்தது கிடக்கட்டும். அவருடைய ஸமாதானத்திற்கும் இவருடைய ஸமாதானத்திற்கும் சிறிதும் வாசியில்லை. உண்டாகில் உரைமினே. இத்தகைய ஸமாதானம் தெரிவிப்பதற்கும் நாலு பக்கம் அநபேக்ஷிதம். நான்குவரியே போதும். நாலுபக்க விரிவுக்கும் ஒரு கதையுண்டு.

### ஸ்ரீராமாயண ஸ்ரீபாஷ்யகதை

3. ஒரு ஆசார்யபுருஷர் திருமாளிகை வாசல் திண்ணையில் வெறுமனே வீற்றிருந்தால் கௌரவமாக இராதென்றெண்ணி ஒரு ஸ்ரீராமாயண ஸ்ரீகோசத்தைக் கையிலே வைத்துக்கொண்டு இருந்தார். ஒருவர் வந்து கோயம் க்ரந்த:?—இது என்ன புத்தகம்? என்று கேட்டார். ஸ்ரீராமாயணமென்று சொன்னால் லாகவமாகுமென்று கருதி "அயம் ஸ்ரீபாஷ்யக்ரந்த:" என்றார். என்றதொடு நில்லாமல் "நீர் கோயம் க்ரந்த:? என்று பூர்வபக்ஷம் பண்ணினீர், ஸ்ரீபாஷ்ய க்ரந்த: என்று நாம் ஸித்தாந்தம் பண்ணினோம், போம்" என்றார். அந்த ஸ்ரீகோசம் ஸ்ரீபாஷ்யமன்று என்பதை நன்கறிந்த இவர் "ஸ்ரீபாஷ்யமாகில் நாலு வரி வாசித்துக்காட்டும், கேட்போம்" என்றார். அதற்கு அப்பெரியவர் "நீர் கோயம் க்ரந்த: என்று பூர்வபக்ஷம் பண்ணினீர் ; நாம் ஸ்ரீபாஷ்யக்ரந்த: என்று ஸித்தாந்தம் பண்ணினோம். மறுபடியும் அதை வாசித்துக்காட்டும்படி நீர் பூர்வபக்ஷம் பண்ணினீர் ; வாசிக்க முடியாதென்று நாம் ஸித்தாந்தம் பண்ணி விட்டோம், போம்" என்றாராம். இப்படியே பூர்வபக்ஷங்களும் ஸித்தாந்தங்களும் ஒருயாமம் நடந்ததாம். அதே கதைதான் இவருடையதும்.

---

## சிங்கப்பெருமாள் திருவாக்கு வெற்றி—நான்காவது மலர்.

# 4. தயிரரவமாராய்ச்சியின் தத்துவம்.

1. திருப்பாவையில் * தயிரரவம் கேட்டிலையோ * என்றவிடத்து 'தயிரரவும்' என்று உம்மையோடு கூடிய பாடமிருக்கவேணுமென்றும், அது தான் பொருந்துமென்றும், அப்பாடமே வியாக்கியானத்திற்குச் சேருமென்றும் இவர் பிரளயமாக வெழுதியிருந்தார் ; அதைப் பற்றி "தயிரரவமாராய்ச்சியின் தடுமாற்றங்கள்" "தயிரரவப்பாடத் திருத்த மறுப்பு" என்னுமிரண்டு பெரிய வியாஸங்களை அடி

யேன் வடநாட்டுத் திருப்பதி யாத்திரை தொடங்கும் ஸமயத்தில் மங்களகிரி க்ஷேத்திரத்தில் ஒன்றும் ஜகன்னாத புரியில் மற்றொன்றுமாக வெழுதி வெளியிட்டிருப்பது நாடு நகரமு மறிந்தது. அவற்றுள் முதல் வியாஸத்தின் முகப்பில் ஒரு ச்லோகம் - *பித்ரு பர்யர்யபூதஸ்ய மாதாமஹமஹாத்மந:, ப்ரதிதாம் திவ்யஸூக்திம் தாம் ஸார்த்தயந் விஜயீபவ * என்று இட்டிருக்கின்றேன். இதன் கருத்து;—முதலில் மாதாமஹராய்ப் பிறகு திருத்தந்தையாராக அமைந்த மஹா ஸ்வாமியின் திருவாக்கு [அடியேனை நோக்கி ஸ்ரீரங்கத்தில் அவதரித்தது] ஜகத்ப்ரஸித்தமாக விளங்குகின்றது; அதனைப் பொய்யாக்கக் கனவிலும் கருதவேண்டா - என்பதே. ப்ரக்ருதம் இந்த நூலுக்கு அடியேன் இட்டிருக்கிற பெயரும் அதை யநுஸரித்ததே. அந்த வியாஸமானது அதற்கு முன்னம் நான்கு மாதங்களுக்கு முந்தி அடியேன் ஸ்ரீராமாநுஜன் 109 லும், அம்ருதலஹரி 172லும் வெளியிட்டிருந்த இரண்டு வியாஸங்களுக்கு ஏக தேசம் விடையாக இவர் பிரசுரஞ் செய்த காகிதத்திற்கு ப்ரத்யக்ஷரகண்டனமாகத் தோன்றியதென்பதை ஒருவரும் மறந்திரார். அந்த மங்களகிரி வியாஸத்திலும் அதன் தொடர்ச்சியான ஜகன்னாத வியாஸத்திலும் பலபல விஷயங்கள் பொறிக்கப்பட்டிருந்தாலும் அவற்றை மூன்று வகுப்பாக வகுக்கலாம்; (1) தயிரரவும் என்று இவர் கற்பனை செய்த பாடம் எள்ளளவும் பொருந்தாதென்பதை வெகுவிரிவாக நிரூபித்தல்; (2) அடியேனை நோக்கி இவர்கேட்டிருந்த கேள்விக்கு [யோகவிபாக ப்ரக்ரியா என்றதைப்பற்றின ப்ரச்நத்திற்கு] விபுலமான விடையிறுத்தல்; (3) இவர் நமக்கு விடையிறுக்க வேண்டியதாகச் சில வினாக்களைத் தருதல். ஆக இம்மூன்று வகுப்பில் அமைந்த விஷயங்களுக்கெல்லாம் இவர் நின்று விடையிறுக்கக் கடமைப்பட்டிருந்தும், *தொழும் அத்திசை யுற்று நோக்கியே * என்கிற திருவாய்மொழிப் பாசுரத்தின்படி திக்கு நோக்கித் தெண்டன் ஸமர்ப்பித்து நின்றார். * ஆத்மா ஸம்ரக்ஷிதஸ் ஸும்ஹை:* என்றபடி செய்தார்.

2. அடியேனுடைய முதல் வியாஸ [மங்களகிரிவியாஸ]த்திலுள்ள 25 பாராக்களுக்கும், இரண்டாவதான ஜகன்னாத வியாஸத்திலுள்ள 28 பாராக்களுக்கும் * நாந்யத் பச்யாமி அஹம் க்ஷமம் * என்று திருவடி தெரிவித்த மஹத்தான வுபாயத்தை அவலம்பிப்பதுதான் க்ஷேமம் என்று இவர் உறுதிகொண்டது யுக்ததரமே. *ஆகிலுமாசைவிடாளால்* என்கிற திருவிட வெந்தைப் பாசுரமொன்று திகழ்கின்றதே; அதன்படி இப்போதிவர் பத்தெட்டு வரியில் ஒரு மஹாஸ்த்ரப்ரயோகம் பண்ணுகிறார். ஒரு மஹானுடைய மாளிகையில் தஸ்கரப்ரவேசம் நடந்து ஸர்வஸ்வாபஹாரமாய் விட்டதாம். அத்தோடு ஒரு கௌபீநமும் அபஹரிக்கப்பட்டிருந்ததாம். அந்த மஹான், பறிகொடுத்த ஸர்வஸ்வத்தில் ஒரு த்ரஸரேணும் திரும்பிவர வழியில்லையென்று திண்ணமாக வெண்ணிவிட்டு, அந்த கௌபீனத்தைப்பற்றி மட்டும் போலீஸில் எழுதிவைத்து நடையாக நடந்துகொண்டிருந்தாரென்று ஒரு கதை கேட்டிருந்ததுண்டு; அதையே இப்போது நினைப்பூட்டுகிறாரிவர். அரவு என்னுஞ் சொல் ஒலியென்னும் பொருளைக் குறிக்கமாட்டாதென்பதுபற்றி அடியேனெழுதியிருந்த

> " ஜம்பூத்வீபே பாரதவர்ஷே பரதகண்டே மேரோருத்தரே தக்ஷிணே ச பார்ச்வே ஒருவர் கூட அரவென்னுஞ் சொல்லுக்கு ஒசையென்னும் பொருளை இசையார்............... எப்படிச் சொன்னாலும் ஒலியென்கிற பொருள் கிடைக்காது கிடைக்காது கிடைக்காது "

என்கிற யதார்த்த உக்திகளைத் தலைவிதியேயென்று உதாஹரித்துக் காட்டி " திருவரங்கக் கலம்பகம் செய்யுள் 67ல் * பாரநத்து ஊதும் அரவனை * என்னும் பகுதியையும், லெக்ஸிகனையும் பிற அகராதிகளையுங் காண்க." என்று தலைக்கட்டியுள்ளார்.

இரவியை யிரவின்மதியினை மதியுளிறையினை யிறையுமெண்ணரிய
கரவினைக் கரவின்முனிவனை முனிவர்கருத்தனைக் கருத்தனைத் துடைத்தாள்
பரமனைப் பரமபதத்தனைப் பதத்துட்பாரனைப் பாரநத்தூதும்
அரவனை யரவினரங்கனை யரங்கத்தடிகளை யடிகள் சேவியுமே.

என்னுஞ் செய்யுளில் * பாரநத்தூதுமரவனை என்றுள்ளது. பாரம் - பெரிதான, நத்து- சங்கை, (எடுத்து) ஊதும் அரவனை-ஊதுகின்ற ஓசையையுடையவனை என்று பொருள். இங்கு அரவு என்கிற சொல் கிடப்பதாக இவரெண்ணியது இவர்க்கு உரிய மருள்களில் ஒன்று. கீர்த்தி மூர்த்தியான ஸ்ரீமத் வை. மு. சடகோபராமாநுஜாசார்ய ஸ்வாமியின் தெளிவுரை திகழ்கின்றதே. துடுப்பிருக்கக் கை வேக வேணுமோ! "அரவம்-ரவம்," என்று கண்ணாடிபோல் உரை வகுத்துள்ளார் அப் பெரியார். இதிலிருந்து இரண்டு தத்துவங்கள் வெளியாயின. (1) இங்கு அரவம் என்பதுதான் சொல் வடிவம் என்பதொன்று. (2) அது ரவ: என்னும் வடசொல் திரிபுதான் என்று விளங்கியது மற்றொன்று. இவ்விரண்டு விஷயங்களிலுமே இவர் விப்ரதிபந்நராதலால் தாமெடுத்துக் காட்டினவிடம் தமக்கே கத்தியாயிற்று.

3. நம் ஆசாரியர்கள் "ரக்ஷிக்கும் ஸ்வபாவனுய்" என்று அடிக்கடி பிரயோகிப்பதுண்டு- இது தென்மொழியையும் வடமொழியையும் சேர்த்துச் செய்த விலக்ஷணமான பஹுவ்ரீஹி. ரக்ஷிக்கும் ஸ்வபாவ: யஸ்ய ஸ :—ரக்ஷிக்கும் ஸ்வபாவ: என்று விவக்ஷை. இங்ஙனே பல பிரயோகங்களுண்டு. இவ்வண்ணமாகவே, ஊதும் அரவம் யஸ்ய ஸ:—ஊதுமரவன். ஊதுமரவனை என்றதற்குப் பிறகு 'அரவினரங்கனை' என்றார். அதில் அரவுதான். அது ஓசையைச் சொல்லுமதன்று; *ஸர்வாந் தேவாந் நமஸ்யந்தி கணக்கிலே யாரை யடிபணிந்தால் உய்யலாமென்று பார்த்துக் கண்டவிடமெங்கும் தலையை மடுத்து விஷய பிக்ஷை பண்ணுகிறார் பாவம். * த்ராதும் ந சக்தா யுதி ராமவத்யம் * என்பதை இவர் ஒருபோதும் மறக்கலாகாது. மீண்டும் சபதமிட்டுச் சொல்லுகிறேன் அரவு என்பது ஓசைக்கு வாசகமாக நவத்வீபங்களிலும் கிடைக்காது; ஜம்பூத்வீபே பாரதவர்ஷே பரதகண்டே மட்டுமன்று. கிடைத்துவிட்டதென்றே வைத்துக் கொள்வோம்; இதனால் "தயிரரவும்" என்கிற பாடத்திற்கு உபபத்திலேசமும் கிடைக்காதென்பது உறுதி.

**நான்காவது மலர் முற்றிற்று.**

---

சிங்கப்பெருமாள்திருவாக்குவெற்றி—ஐந்தாவதுமலர்

# 5. மணவாளமாமுனிகளின் வாத்ஸல்யவிவரண விஜயத்வஜம்

1. வெகுஸமீபத்தில் அம்ருதலஹரியில் மணவாளமாமுனிகளின் வாத்ஸல்ய விவரணம் என்னும் நூல் 13 பக்கங்கள் கொண்டது வெளிவந்திருப்பது உலகமறிந்தது. நேற்று கார்த்திகை மாதத்து பக்தனிதழில் வாத்ஸல்யத்தைப்பற்றி இவர் எழுதியிருந்தது ஸர்வாத்மநா அஸம்பத்தமென்று மூதலிக்கவே அஃது அடியேனால் எழுதப்பட்டதென்பதை ஸ்ரீவைஷ்ணவவுலக முழுதுமுணர்ந்துள்ளது. அதன் ஸாரமென்னவென்றால்; எம்பெருமானுக்கு பக்தர்களின் தோஷங்களில் அதர்சநமுமுண்டு, (அதாவது தோஷங்களைக் காணமலேயிருந்துவிடுவது முண்டு); தோஷங்களையே குணமாகக் கொள்ளுதலுமுண்டு. ப்ரீதியின் முற்றின நிலைமை இதுவே. வாத்ஸல்யமென்னும் குணத்தின் ஸ்வரூபம் இதுதான் ஆக இப்படிப்பட்ட அர்த்தத்தையே எம்பெருமானர் தரிசனத்திற் படிந்த ஸதாசாரியர்கள் ஆதரித்து வருகிறார்கள். ஒருவகுப்பினர், தோஷங்களைக் காணமலேயிருந்துவிடுவது என்பதுதான் உண்டென்றும், தோஷங்களையும் குணமாக்க்

கொள்வதென்பது விபரீத சாஸ்த்ரார்த்தமென்றும் சொல்லுவதோடு நில்லாமல் சில நூற்றாண்டுகளாகவே ப்ரபல தூஷணமும் செய்து வருகிறார்கள். அது வாய்ப்பேச்சோடு நில்லாமல் க்ரந்தங்களிலும் ஏறிக்கிடக்கிறது. உண்மை இப்படியிருக்க, இவர் வாத்ஸல்யார்த்த விஷயத்தில் இருவகுப்பினரும் ஒரேவித மான உணர்ச்சியை யுடையவர்களேயென்று புதியதொரு ஸ்ருஷ்டியைத் தொடங்கினர். அதை 28 வாக்யச்ரேணிகள்கொண்டதொரு நூலினால் நிரஸித்து, எம்பெருமானுடைய நிகரில் புகழை இல்லைசெய்யுமவர்களைத் தழுவிக் கொள்வது தகுதியற்றதென்பதை மூதலித்திருக்கிறேன். எப்படி மூதலித்திருக்கிறேன்? மறுவாய் திறக்க இடமில்லாதபடி. இதை இருவகுப்பினருங்கண்டு யுக்தம் யுக்தமென்றார்களேயல்லது அயுக்தமென்றார் ஒருவருமிலர். இதைப் பற்றி மறுப்பெழுதப்புக இவரிடம் என்ன விஷயமுள்ளது? ஏற்கெனவே தாமெழுதினவற்றையும் நாமெழுதினவற்றையும் அபூர்வ விஷயம்போலெழுதி ஏடுகளை நிரப்பியுள்ளார். அடியேனுடைய நூலிலுள்ள ஒவ்வொரு வாக்ய ச்ரேணியையுமெடுத்து அநுவதித்து விஷயங்களை விளக்கத் தொடங்கினாலன்றோ விவேகிகளுக்குத் தத்துவம் விளங்கும்.

### அதிவாதமென்பதற்கு ப்ரௌடவாதமென்று பொருளாம்

2. "வாத்ஸல்யம் நாம தோஷேபி குணத்வபுத்தி:" என்று ச்ருதப்ரகாசிகாசார்யர் ஸாதித்திருந்ததை (அதிவாத:) என்று தள்ளி வேறுபொருள் கத்ய பாஷ்யத்தில் எழுதப்பட்டிருந்ததை நாமெடுத்துக் காட்டியிருந்தோம். அதற்கு எழுதுகிறாரிவர்—"அதிவாதமென்றால் ப்ரௌடவாதமென்று பொருள்" என்கிறார். ப்ரௌடவாதமென்றால் என்ன? என்றுகேட்டால் அதிவாதமென்பர். இப்படியே சுற்றிச் சுழன்றுகொண்டிருக்கவேண்டுமத்தனை. இது ஆர்ஜவத்தில் சேருமா?

### ஹரிஸமயதிவாகரப்ரஸ்தாவம்

3. நமது இந்த நூலின் பெயரில் திகழும் சிங்கப்பெருமாள்ஸ்வாமி ஸ்ரீராமாநுஜ ஸித்தாந்த ப்ரகாசிகை யென்றொரு க்ரந்த ரத்நமருளிச்செய்திருக்கிறார். அது 30, 35 வருஷங்களுக்குமுன்பு மதுரை ஹரிஸமயதிவாகர பத்ரிகையில் சிறிது சிறிதாக வெளிவந்து கொண்டிருந்தது. அதில் வாத்ஸல்ய விஷயமும் விசாரிக்கப்பட்டிருக்கும். அதையிவர் ப்ரஸங்கித்து "இவ்விஷயங்களை அந்த க்ரந்தத்தில் நன்கு காணலாம்" என்கிறாரிங்கு. மஹாஜ்ஞானநிதியாய் அடியேனும் ஆசார்யப்ரதிபத்திபண்ணநின்ற அந்த மஹாஸ்வாமியையும் அக்கிலி பிக்கிலியாக்கப் பார்ப்பது மஹத்தான ஸாஹஸம். வாத்ஸல்ய விஷயமாக அந்த மஹாஸ்வாமி அருளிச்செய்திருப்பவற்றை அப்படியே வெளியிட்டிருக்கலாமே. சுஷ்கவாக்ஜாலப்ரபஞ்சமத்யே அந்த திவ்யஸூக்திகள் "கிஸலயமிவ பாண்டுபத்ராணாம்" என்ற சாகுந்தலரீதியிலே திகழலாகாதோ? விபரீதமும் விப்ரலம்பமும் ஒவ்வொன்றிலுமா?

### மேல்நாட்டு ப்ரஸங்கப்ரதர்சனம்

4. வாத்ஸல்யத்தில் ஐகரஸ்யமுண்டென்பதை மேல்நாட்டில் பாமர பண்டிதர்கள் நிரம்பிய ஸதஸ்ஸில் சிக்கதேவராஜ விண்ணப்ப விவரணமுகேந தாம் வெளியிட்டதாக வரைகின்றார். "அத்வைதிகளும் பகவானை குண சூந்யனென்கிறார்கள்; விசிஷ்டாத்வைதிகளும் அப்படியேதான் சொல்லுகிறார்கள். ஆனால் அவர்கள் வெறுமனே குணசூந்யனென்கிறார்கள்; நாம் ஹேயகுண சூந்யனென்கிறோம். இரண்டெழுத்தில் தான் பேதம். ஆகவே அவர்களுக்கும் நமக்கும் ஐகரஸ்யத்தில் குறையில்லை" என்று உபந்யஸித்தாலும் அபிநந்தனம் செய்ய நிரம்பியேயிருப்பர்கள். ஆக ஆராய்ச்சித்திரள் என்னும் சிறுசுவடியில் உள்ள விஷயங்களெல்லாம் இத்தகையனவென்று நிரூபித்தோமானோம்.

சிங்கப்பெருமாள் திருவாக்குவெற்றி—ஐந்தாவதுமலர் முற்றிற்று.

---

# சிங்கப்பெருமாள் திருவாக்கு வெற்றியின் அநுபந்தம்.

இந்த வெற்றிநூலுக்கு மூலமான ஆராய்ச்சித்திரள் 13—2—59 தேதியில் அடியேனுக்குக் கிடைத்தது. அன்றே அப்போதே அதை முழுதும் வாசித்து இந்த வெற்றிநூலை எழுதத் தொடங்கினேன். இதில் ஐந்து மலர்களில் முதல் மலரைமட்டும் அப்போதே யெழுதி முடித்தேன். அன்றுமாலை திருவல்லிக்கேணி வானமாமலை மடத்தில் உபந்யாஸம் நியமிக்கப் பட்டிருந்ததனால் அதற்காக சென்னைக்கு விடைகொள்ள நேர்ந்தபடியால், எழுதிமுடித்த முதல் மலரை அன்றே சென்னையில் அச்சிடக்கொடுத்தேன். அது மறுநாளே அச்சிட்டு முடிக்கப் பட்டது. ஸமீபகாலத்தில் இம்மண்ணுலகின் தௌர்ப்பாக்கிய வசத்தினால் மாம்பலத்தில் திருநாட்டுக்கெழுந்தருளின ஸ்ரீமதுபயவே. புரிசை க்ருஷ்ணமாசாரியர் ஸ்வாமிக்கு அப்போது [மூன்று நாள்] நடந்து கொண்டிருந்த திருவத்யயனத்தில் திருப்பதி முதலான சில தலங்களிலிருந்து சில வித்வான்கள் அங்கு உபஸ்திதர்களா யிருந்தபடியாலும், அடியேனும் அந்தத்திருவத்யயனத்திற்கு விடைகொள்ள ப்ராப்தமானபடியாலும் 14—2—59ல் அச்சிடப் பட்டிருந்த முதல் மலரை அன்றிரவு கோஷ்டி முடிந்தபிறகு பத்தெட்டு வித்வான்கள் கடாக்ஷிக்குமாறு ஸமர்ப்பித்துவிட்டு வந்தேன். அவர்கள் அங்கு ஒரு சிறு ஸபை சேர்த்து இதை வாசித்து மிகமகிழ்ந்து மறுநாள் காலையில் மஹத்தான அந்த மகிழ்ச்சியைத் தெரிவித்தார்கள். மற்ற நான்கு மலர்களையும் விரைவில் கடாக்ஷிக்க விருப்பமும்காட்டியிருந்தார்கள். மறுநாளே இந்த வெற்றிநூல் பூர்த்தியாக அச்சு நிறைவேறப்பெற்றது.

இதை வெளியூர்களிலும் சில ஆப்த மஹநீயர்களுக்கு அனுப்பி அவர்களின் ஸம்மதியைப் பெற்றே இதை ஸ்ரீராமானுஜன் மூலமாக வெளியிடவேண்டுமென்று நிச்சயித்து, தனியாக ஐம்பது புத்தகங்கள் ஸித்தப்படுத்தி நாற்பது மஹநீயர்களுக்கு அனுப்பி "தேவரீர்களின் திருவுள்ளத்தைச் சுருக்கமாகவாவது விரைவில் தெரிவித்தருளவேணும்" என்று விண்ணப்பமும் விடுத்திருந்தேன். 21—2—59 தேதியாகிய இன்றுவரை 26 மஹான்களிடமிருந்து பதில் ஸ்ரீமுகம் கிடைத்தது. எல்லாருடைய ஸ்ரீமுகங்களிலும் பரமஸந்தோஷமே தெரிவிக்கப்பட்டிருந்தது. அந்த ஸ்ரீமுகங்களெல்லாவற்றிலிருந்தும் எடுத்த ஸாரம் வருமாறு; இப்போது விமர்சிக்க எடுத்துக்கொண்ட ஆறு விஷயங்களில் இளையபெருமாள் அஸத்யவாதியா? என்கிற ஒரு விஷயத்தைப் பற்றின சர்ச்சையே பொதுவாக எல்லார்க்கும் முக்கியமாகத் தோன்றும். மற்ற விஷயங்களில் அவ்வளவு ஆவச்யகதை தோன்றவில்லை. த்ரௌபதீ சரணாகதி விஷயத்தில் மூன்று நான்கு வருடங்களுக்கு முன்னமே தேவரீருடைய ஸூக்தி ஸுதாநிதியால் உலகம் தெளிவுபெற்றிருப்பதால் அதைப்பற்றி இனி மூளையைக் கலக்கிக்கொள்ள யாரும் விரும்பமாட்டார்கள். இளையபெருமாள் அஸத்யவாதி யென்ற விஷயத்தில் ஆங்காங்கு த்ரிமதஸ்தர்களுக்குமே ஹாஹாகாரம் இருந்து வருவதாகத் தெரிவதால் இதில் இப்போது தேவரீருடைய வெற்றிநூலால் மிக்க தெளிவு ஏற்பட்டது தவிர அநேக அபூர்வவிஷயங்களை இந்த வியாஜத்தினால் உலகம் தெரிந்துகொள்ள பாக்கியம் பெற்றது தனிச்சிறப்பான விஷயம். [கோதாநிலைய வெளியீடுகள் எங்களுக்கும் கிடைத்திருக்கின்றனவென்று சிலர் எழுதினார்கள். இனி கிடைக்கக்கூடுமென்று சிலர் எழுதினார்கள்.

அடியேனுடைய ஆப்த ஸுஹ்ருந்மணிகளில் அக்ரேஸரரும் பண்டிதோத்தமரும் மஹா விவேகியுமான ஸ்ரீ. உ. வே. வேதவ்யாஸ பட்டர் ஸ்வாமியின் ஸ்ரீமுகத்திலிருந்து, வெற்றிநூலில் அடியேனெழுதத் தவறிப்போனவொரு விஷயத்தைத் தெரிந்துகொண்டேன்;

மற்றும் சிலமஹான்கள் வெற்றிநூலில் தாங்கள் கண்ட ஸாராம்சமாகத் தெரிவித்தவற்றையும் இதன்கீழ் விவரிக்கிறேன். தற்காலம் ஸ்வல்பமே தெரிவிக்கப்படுகிறது.

## சிங்கப்பெருமாள் திருவாக்கு வெற்றியின் ஸாராம்சங்கள்.

இந்நூலில் விமர்சிக்கப்பட்டுள்ள ஐந்து விஷயங்களிலும் ஸாராம்சங்களைச் சில ஸஹ்ருதயஸஹ்ருந்மணிகள் ஸூசிப்பித்தபடியே யெடுத்துக்காட்டுகிறோமிங்கு; இதை மட்டும் வாசித்துப்பார்த்தாலும் மத்யஸ்தர்களுக்கு நல்ல தெளிவு பிறக்குமென்பது திண்ணம்.

1. முதல் விஷயம் இளையபெருமாள் அஸத்யவாதியா? என்பது. இவ்விஷயமாக ஸ்ரீராமானுஜன் 116ல் அடியேன் ஐந்து பாராக்கள் எழுதியிருந்தேன். அவற்றுள் நான்காவது பாரா (12 வரிகள்)ப்ரக்ருத விஷயமான வாதவிவாதம் தலையெடுக்க இடமில்லாதபடி செய்திருக்கிறது. ஆனால் விவாத ஸ்வாமி அந்த பாராவைத் தமது ஆராய்ச்சியில் ருஜுவான முறையில் அநுவாதம் செய்யாமல் மாறுபாடான முறையில் அநுவாதம் செய்திருக்கிறார். அதைப்பற்றி இந்த வெற்றிநூலில் (பக்கம் 16ல்) "நமது வார்த்தையின் பொருளறியாமை" என்ற மகுடத்தின்கீழ் (பாரா 31). அடியேன் எழுதியிருக்கிறேன். அந்த ஸமாதானத்திற்கு இவர் பதில் சொல்லியேயாகவேண்டும். அதுநிற்க. நமது வியாஸத்தில் நாம் எழுதியிருந்ததையும், விவாத ஸ்வாமி அதை மாறுபாடாக அநுவதித்திருந்ததையும் [ஸ்ரீ உ. வே. பட்டர் ஸ்வாமி யெடுத்துக்காட்டியருளினதற்கு க்ருதஜ்ஞதாநுஸந்தானம் செய்து கொண்டு] விவரிக்கின்றேன். மேலே ப்ரஸ்தாவித்த அடியேனுடைய நான்காவது பாரா வருமாறு;—

> இளைய பெருமாள் மீது குற்றம் சாட்டுவதானால் எவ்விதமான குற்றம் சாட்டலாமென்று பார்க்கவேணும். ஒரு சேவகன் தான் சொன்னபடி நடந்து கொள்ளவில்லை யென்றால் அது வேறுகுற்றம்; ப்ரபு நியமித்தபடி நடந்துகொள்ளவில்லை யென்றால் அது வேறு குற்றம். கடைக்குப் போய் இன்னது வாங்கி வா' என்று ப்ரபவினால் கட்டளையிடப்பெற்ற சேவகன் அது செய்திலனென்றால் 'ப்ரபுவின் வாக்கை மீறின ஸ்வதந்திரனிவன்' என்னப்பெறுவனே யொழிய பொய் சொன்னவன் என்னப் பெறமாட்டான். சேவகன் தான் சொன்னபடி நடந்து கொள்ளாமற் போனால் அப்போது அவன் பொய்யனென்கிற குற்றத்திற்கு ஆளாவான். இளையபெருமாள் 'நான் படை வீட்டிலேயேயிருந்து மாதா பித்ரு சுச்ரூஷை செய்து போருகிறேன்' என்று சொல்லி வைத்திருந்து அது செய்யத் தவறியிருந்தானாகில் அப்போது அவனைப் பொய்யனென்னலாம். இது இல்லவேயில்லை. உடனிருந்து ஸர்வ கைங்கர்யங்களையும் பண்ணுகிறேனென்று சொல்லி, சொன்னதையே செய்து தலைக்கட்டின அவனுக்குப் பொய்யனென்கிற பட்டம் எப்படி ஏற்கும்.

ஆராய்ச்சித்திரளில் பக்கம் 11ல் இதனை அநுவாதம் செய்து காட்டியுள்ள விவாத ஸ்வாமி ருஜுவான முறையில் எடுத்துக்காட்டியிருக்கவில்லை. "ப்ரபு நியமித்தபடி நடந்துகொள்ளவில்லையென்றால் அது வேறு குற்றம்; ஸேவகன் தான் சொன்னபடி நடந்துகொள்ளாமற் போனால் அப்போது அவன் பொய்யனென்கிற குற்றத்திற்கு ஆளாவன்" என்று அடியேனெழுதியிருப்பதுபோல் எடுத்துக்காட்டியிருப்பது அநீதியல்லவா? அடியேனுடைய அந்த வாக்யச்ரேணியில் இந்த வாக்யமுமிருப்பது வாஸ்தவம். இடந்தவறுதலாக எடுத்துக் காட்டுவது ஆர்ஜவத்திற்குச் சேராதல்லவா? "சேவகன் தான் சொன்னபடி நடந்துகொள்ளாமற் போனால் அப்போது அவன் பொய்யனென்கிற குற்றத்திற்கு ஆளாவான்" என்னுமிந்த நமது வாக்கியத்தை இவர் தமக்கு ஸாதகமாக எடுத்துக்காட்டி இதன்படி லக்ஷ்மணன் பொய்யன்தானே யென்று வினவுகின்றார். இந்த வினவுக்கு நமது வாக்கியத்தில் ஈஷத்தாவது இட

மிருக்கின்றதோ? இவர் தமக்கு ஸாதகமாக எடுத்துக்காட்டியுள்ள வாக்கியத்தை நாம் எழுதி னவுடனே அதன் பொருளை நாமே விவரித்திருக்கிறோமே; (அதாவது)

"இளையபெருமாள் நான்படைவீட்டிலேயே யிருந்து மாதாபித்ரு சுச்ரூஷை செய்துபோருகிறேன் என்று சொல்லிவைத்திருந்து அதுசெய்யத்தவறியிருந்தானாகில் அப்போது அவனைப் பொய்யனென்னலாம். அது இல்லவேயில்லை. உடனிருந்து ஸர்வகைங்கரியங்களையும் பண்ணுகிறேனென்று சொல்லி, சொன்னவதையே செய்து தலைக்கட்டின அவனுக்குப் பொய்யனென்கிற பட்டம் எப்படி ஏற்கும்?"

என்கிற நமது கேள்வியன்றோ ப்ரக்ருதவாதத்தில் உயிரானது. இதை யெடுத்துக் காட்டாது மறைத்திட்டால் என்ன அர்த்தம்? இவ்விஷயத்தை ஸ்ரீ உ. வே. பட்டர் ஸ்வாமி ஆராய்ந்தார்.

இங்கு ஸாரமாகத் தெரிவிப்பதிவ்வளவே; இளையபெருமாள் * அஹம் ஸர்வம் கரிஷ் யாமி * என்ற வார்த்தையை எப்போது சொன்னார்? எந்த ஸந்தர்ப்பத்தில் சொன்னார்? எவ் விதமாகச் சொல்லியிருக்கிறார்? என்பதைச் சிறிது கவனித்தாலும் போதுமே. அந்த வார்த் தையை அவர் பொதுவாக முன்னமே சொல்லிவைத்திருந்தாலாவது அதைப்பற்றிக்கொண்டு ஆக்ஷேபத்தை வளரவிடலாம். தம்மையும் காட்டுக்கு உடனழைத்துச் செல்லவேணு மென்பதை வலிதாக விஜ்ஞாபனம் செய்துகொண்டே வருகையில், தாம் கூடவந்தால் அத னால் பெருமாளுக்கு விளையக்கூடிய ஸௌகர்யாதிசயங்களைத் தெரிவிக்கிறார் * அஹம் ஸர்வம் கரிஷ்யாமியினால். இதற்கு அடுத்த ச்லோகமென்ன? *ராமஸ்த்வநேந வாக்யேந ஸுப்ரீத:* என் பதே. உடனே பரமப்ரீதிபூண்டு நான்குச்லோகங்களினால் கட்டளையிடுவதைக் காணும்போது கண்ணீர் பெருகுமே, "அவரிடம் உத்தரவு பெற்றுக்கொள், இவரிடம் அனுமதி பெற்றுக் கொள்; அதை எடுத்துக்கொள்; இதைவஹித்துக்கொள்; தாமதியாமல் புறப்படு" என்றன்றோ சொல்லியிருக்கிறார் பெருமாள். இங்ஙனே நெஞ்சு கனிந்து நியமித்ததை யனுட்டித்த இளைய பெருமாளை அஸத்யவாதி என்றால் விவேகமுடையார் சொல்லும் சொல்லா இது?

2. ராமமந்தோதரீஸம்வாத விஷயம் இரண்டாவது. இதில் இவ்வளவே ஸாரம். மந் தோதரியானவள் ப்ரேதனான ராவணனை நோக்கிப் புலம்பிப் பேசின பேச்சில் இராமபிரா னைப்புகவிட்டு விவரணம்காட்டினது மஹத்தான அசட்டுத்தனம். அவதாரிகைகள் இடவேணு மானால் "இங்ஙனே பெருமாளுக்குத் திருவுள்ளமாக" என்று இட்டாலாவது சிறிது பொருந்தும். "ஸ்ரீராமன்கேட்க, ஸ்ரீராமன் வினவ" என்றிட்டது அஸப்யமே. (M. R. V.)

3. "கட்டிலிலே வைத்தபோதோடு காட்டிலே விட்டபோதோடு வாசியற"—இது மணவாளமாமுனிகளின் ஸ்ரீஸூக்தியன்று; என்னுடைய ஸொந்த ஸ்ரீஸூக்தியென்கிறார். (வி) என்கிற ஒரெழுத்துத்தவிர மற்றதெல்லாம் விசதவாக்சிகாமணிகளின் அத்புத திவ்யஸூக்தி யாயிருக்க இவரிங்ஙனே யெழுதுவது விவேகிகளால் விமர்சிக்கத்தக்கது. (S. R. R.)

4. தயிரரவமாராய்ச்சியில் இவர்தாமே கைகூப்பிநின்றபிறகு வக்தவ்யமென்கொல்? திவ்யப்ரபந்தங்களில் அரவம் எனவருமிடங்களிலெல்லாம் 'அரவும்' என்று பாடமிருக்கட்டும் என்றுகூட நாம் முழுமனமாக இசைவோம். அதனால் லவலேசமும் லாபமில்லையே என்ப தன்றோ விஷயம். இதில் இவர் கைகூப்பியாயிற்றென்பதே ஸாரம். (C. R. C.)

5. மணவாளமாமுனிகளின் வாத்ஸல்ய விவரணம் ஐந்தாவது விஷயம். இதில் நாம் தெரிவித்த சாஸ்த்ரார்த்தங்களை இவர் நிச்சலும் சிந்தை செய்வது நன்று. சிங்கப்பெருமாள் ஸ்ரீஸூக்திகளைக் கண்டுகொள்க வென்கிறார். அவற்றை இவர்தாமே வெளியிட்டுவிட்டால் ப்ராமாணிகத்வம் பொலியும். .... ... ... (*)

ஓம் சாந்திச் சாந்திச் சாந்தி:.

# சாங்கரசிரோபூஷா — மதிப்புரை.

## 15-2-1959 தேதியுள்ள தினமணிச்சுடர் அநுபந்தத்தில் வெளிவந்தது.

"[இயற்றியவர்: ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியார். ஸம்ஸ்கிருத நூல். கிடைக்குமிடம். வைதிக மனோஹரா ஆபீஸ், விஷ்ணு காஞ்சீபுரம்.] 'த்ரவிடாத்ரேயதர்சனம்' என்கிற ஒரு ஸம்ஸ்கிருதநூல் மயிலை ஸம்ஸ்கிருதகல்லூரி புரொபஸர் போலஹம் ஸ்ரீ ராமசாஸ்திரிகளால் இயற்றப்பட்டு வெளியாகியிருந்தது. அதில், பகவத் ராமாநுஜருடைய ஸ்ரீபாஷ்யத்தின் தொடக்கத்தில் "பகவத் போதாயநக்ருதாம்" என்று தொடங்கி எழுதப்பட்டிருக்கும் விஷயம் பொய்யானதென்று நிரூபணம் செய்ய முயற்சி கொள்ளப்பட்டிருக்கின்றது. அதாவது, வியாஸர் இயற்றிய ப்ரஹ்மசூத்திரத்திற்கு போதாயனரென்னும் முனிவர் வ்ருத்தியென்னும் பெயரால் விரிவான வியாக்கியானமெழுதியிருந்ததாகவும், அந்த விரிவுரையைச் சுருக்கி டங்கர், த்ரமிடர் முதலானோர் உரை செய்திருந்ததாகவும் கூறி, ஆக இப்பூருவர்களின் கொள்கையையொட்டி ஸ்ரீ ராமாநுஜர் தாம் ஸூத்ரபாஷ்யம் இயற்றுவதாய்ப் பிரதிக்ஞை செய்யப்பட்டது. இதனால் பகவத்ராமாநுஜருடைய ஸ்ரீபாஷ்யம புராதன மஹரிஷிகளின் மதத்தை யனுசரித்தே தோன்றியதென்பதாகத் தெரிவிக்கப்பட்டதாயிற்று.

மேலேகுறித்த த்ரவிடாத்ரேய தர்சனமெழுதிய போலஹம் சாஸ்திரிகள், ராமாநுஜ பாஷ்யம் மஹாரிஷிகளின் நூல்களைப் பின்பற்றித் தோன்றியதென்பதை ஏற்காதவராய், போதாயனரென்னும் மஹரிஷி ப்ரஹ்ம சூத்திரத்திற்கு வ்ருத்தி கிரந்தமென்று ஒரு வியாக்யானம் செய்ததே கிடையாதென்றும். ராமாநுஜ மதமென்பது நூதனமாகவுண்டானதே யல்லது புராதனமான ஒரு நூலையும் மூலமாகக் கொண்டதன்று என்றும். ராமாநுஜ மதம் நூதனமென்பதை வேதாந்ததேசிகரும் யதிராஜ ஸப்ததியில் ஒப்புக்கொண்டேயிருக்கிறாரென்றும் ஆளவந்தார் முதலான ஸ்ரீ வைஷ்ணவ ஆசாரியர்கள் குருகூர்ச் சடகோபனென்கிற நம்மாழ்வாரையே த்ரவிடாசார்யராகக் கொண்டவர்களென்றும், நம்மாழ்வாருடைய திருவாய்மொழியையே த்ரவிடபாஷ்யமென்று இவர்கள் வழங்கிவந்தார்களென்றும் எழுதிவைத்தார்.

மேஷ்டி சாஸ்திரிகளின் நூலில் கண்ட ஒவ்வொரு விஷயத்தையும் காஞ்சீபுரம் அண்ணங்கராசாரிய ஸ்வாமிகள் தமது இந்த நூலில் தக்க பிரமாணங்களைக் கொண்டு ஆராய்ந்து, கண்டனம் செய்து பகவத் ராமாநுஜ மதம் புராதனமே என்பதை ஸ்தாபித்திருக்கின்றார். ப்ரம்ம சூத்திரத்திற்கு போதாயன முனிவர் வ்ருத்தியென்கிற வியாக்யானம் செய்ததுண்டென்பதை சங்கர பகவத்பாதாளுடைய பாஷ்யத்தின் வியாக்யானங்களைக் கொண்டும் மற்றும் அத்வைத மதத்தலைவர்களின் நூல்களைக் கொண்டும் ஸ்தாபித்திருக்கிறார். வேதாந்த தேசிகர் ராமாநுஜமதத்தை நவீனமென்று ஒப்புக்கொண்டிருக்கிறாரென்பது மருள் என்று விவரித்துக் காட்டியிருக்கிறார். காஷ்மீரமண்டலத்தில் சாரதா பீடத்தில் சேமிக்கப்பட்டிருந்த போதாயன விருத்தியுரையை ஸ்ரீ ராமாநுஜரும் கூரத்தாழ்வானும் வெகு பரிச்ரமப்பட்டுப் பார்வையிட்டு வந்த வரலாறுகளை தக்க ஆதாரங்களுடன் எடுத்துக் காட்டியிருக்கின்றார். ஆளவந்தார் முதலானவர்கள் நம்மாழ்வாரையே த்ரமிடாசாரியராகக் கொண்டார்களென்கிற வாதத்தை விசேஷமாகக் கண்டித்திருக்கின்றார்.

ஆக, 74 பாராக்கள் கொண்ட பத்து பரிச்சேதங்களையுடைய சாங்கர சிரோபூஷா என்னுமிந்த நூல், ஸ்ரீ வைஷ்ணவர்களின் கொள்கைகளைத் திடமாக ஸ்தாபித்திருக்கிறது. ஸம்ஸ்கிருத நடையானது அரிய பெரிய விஷயங்களையும் எளிதாகப் புரிந்து கொள்ளும்படி வெகு லலிதமாக அமைந்திருக்கிறதென்பது விசேஷமாகக் குறிப்பிடத்தக்கது. த்ரிமதஸ்தர்களும் உகந்து வாசிக்கக்கூடிய நூல் இது."

— டி. ஜி. எஸ்.